

இப் புராணம் கிடைக்குமிடம் :

**தரணி அச்சகம்**

சர் கிருஷ்ணராவ் ரோடு, தேனாம்பேட்டை,
பித்தாபுரநகர் சென்னை 18.

**திருநீலகண்டதேவர்**
நேட்டிவ் டாக்டர்

**ராஜ ராஜேஸ்வரி வைத்தியசாலை**

**திருவள்ளூர்**

சிவமயம்.

# பூசலார் நாயனார் புராணம்

1. அன்றினார் புரமெ ரித்தார்க் காலய மெடுக்க வெண்ணி
யொன்றுமங் குதவா தாக வுணர்வினா லெடுக்குந் தன்மை
நன்றென மனத்தி னாலே நல்லவா லயந்தான் செய்த
நின்றவூர்ப் பூசலார்தந் நினைவினை யுரைக்க லுற்றாம்.

2. உலகினில் ஒழுக்கம் என்னும் உயர்பெருந் தொண்டை நாட்டு
நலம்புரி சிறப்பின் மிக்க நான்மறை விளங்கு மூதூர்
குலமுதற் சீலம் என்றும் குறைவிலா மறையோர் கொள்கை
நிலவிய செல்வம் மல்கி நிகழ்திரு நின்ற ஊராம்.

3. அருமறை மரபு வாழ அப்பதி வந்து சிந்தை
தருமுணர் வான எல்லாம் தம்பிரான் கழல்மேற் சார
வருநெறி மாறா அன்பு வளர்ந்தெழ வளர்ந்து வாய்மைப்
பொருள்பெறு வேத நீதிக் கலையுணர் பொலிவின் மிக்கார்.

4 "அடுப்பது சிவன்பால் அன்பர்க்(கு) ஆம்பணி செய்தல்" என்றே
கொடுப்பதோர் வகையுந் தேடி அவர்கொளக் கொடுத்துக் கங்கை
மடுப்பொதி வேணி ஐயர் மகிழ்ந்துறை வதற்கோர் கோயில்
எடுப்பது மனத்துக் கொண்டார் இருநிதி இன்மை எண்ணார்.

5. மனத்தினாற் கருதி எங்கும் மாநிதி வருந்தித் தேடி
"எனைத்துமோர் பொருட்பே றின்றி என்செய்கேன்" என்று நைவார்
நினைப்பினால் எடுக்க நேர்ந்து நிகழ்வுறு நிதியம் எல்லாம்
தினைத்துணை முதலாத் தேடிச் சிந்தையால் திரட்டிக் கொண்டார்

6 சாதனத் தோடு தச்சர் தம்மையும் மனத்தால் தேடி
நாதனுக் காலயஞ்செய் நலம்பெறு நன்னாட் கொண்டே
ஆதரித் தாக மத்தால் அடிநிலை பாரித் தன்பால்
காதலிற் கங்குற் போதும் கண்படா தெடுக்க லுற்றார்.

7. அடிமுதல் உபானம் ஆதி யாகிய படைக ளெல்லாம்
வடிவுறுந் தொழில்கள் முற்ற மனத்தினால் வகுத்து மானம்
முடிவுறு சிகரந் தானும் முன்னிய முழத்திற் கொண்டு
நெடிதுநாள் கூடக் கோயில் நிரம்பிட நினைவால் செய்தார்.

8. தூபியும் நட்டு மிக்க சுதையுநல் வினையுஞ் செய்து
கூவலும் அமைத்து மாடு கோயில்சூழ் மதிலும் போக்கி
வாவியுந் தொட்டு மற்றும் வேண்டுவ வகுத்து மன்னும்
தாபனஞ் சிவனுக் கேற்க விதித்தநாள் சாரு நாளில்,

9. காடவர் கோமான் கச்சிக் கற்றளி யெடுத்து முற்ற
மாடெலாஞ் சிவனுக் காகப் பெருஞ்செல்வம் வகுத்தல் செய்வான்
நாடமால் அறியா தாரைத் தாபிக்கும் அந்நாள் முன்னாள்
ஏடலர் கொன்றை வேய்ந்தார் இரவிடைக் கனவில் எய்தி,

10. "நின்றவூர்ப் பூசல் அன்பன் நெடிதுநாள் நினைந்து செய்த
நன்றுநீ டால யத்து நாளைநாம் புகுவோம் நீ இங்(கு)
ஒன்றிய செயலை நாளை ஒழிந்துபின் கொள்வாய்" என்று
கொன்றைவார் சடையார் தொண்டர் கோயில்கொண் டருளப் போந்தார்

11. தொண்டரை விளக்கத் தூயோன் அருள்செய்த துயிலை நீங்கித்
திண்திறல் மன்னன் "அந்தத் திருப்பணி செய்தார் தம்மைக்
கண்டுநான் வணங்க வேண்டும்"; என்றெழுங் காத லோடும்
தண்டலைச் சூழல் சூழ்ந்த நின்றவூர் வந்து சேர்ந்தான்.

12. அப்பதி அணைந்து "பூசல் அன்பர்இங்கு, அமைத்த கோயில்
எப்புடை யது?" என் றங்கண் எய்தினோர் தம்மைக் கேட்க,
"செப்பிய பூசல் கோயில் செய்ததொன் றில்லை" என்றார்
மெய்ப்பெரு மறையோ ரெல்லாம் வருகவென் றுரைத்தான் வேந்தன்

13. பூசுரர் எல்லாம் வந்து புரவலன் தன்னைக் காண
"மாசிலாப் பூச லார்தாம் யார்?" என மறையோர் எல்லாம்
"ஆசில்வே தியன் இவ் வூரான்" என்றவர் அழைக்க ஒட்டான்
ஈசனார் அன்பர் தம்பால் எய்தினன் வெய்ய வேலான்

14 தொண்டரைச் சென்று கண்ட மன்னவன் தொழுது நீங்கி
கொண்டிசை யோரும் ஏத்த எடுத்தவா லயந்தான் யாதிங்
கண்டநா யகரைத் தாபித் தருளுநாள் இன்றென் றும்மைக்
கண்டடி பணிய வந்தேன் கண்ணுதல் அருள்பெற் றென்றான்.

15. மன்னவன் உரைப்பக் கேட்ட அன்பர்தாம் மருண்டு நோக்கி
என்னையோர் பொருளாக் கொண்டே எம்பிரான் அருள்செய் தாரேல்
முன்வரு நிதியி லாமை மனத்தினால் முயன்ற கோயில்
இன்னதாம் என்று சிந்தித் தெடுத்தவா றெடுத்துச் சொன்னார்.

16. அரசனும் அதனைக் கேட்டங் கதிசயம் எய்தி என்னே
புரையறு சிந்தை யன்பர் பெருமையென் றவரைப் போற்றி
விரைசெறி மாலை தாழ நிலமிசை வீழ்ந்து தாழ்ந்து
முரசெறி தானை யோடு மீண்டுதன் மூதூர்ப் புக்கான்-

17. அன்பரும் அமைத்த சிந்தை ஆலயத் தரனார் தம்மை
நன்பெரும் பொழுது சாரத் தாபித்து நலத்தி னோடும்
பின்பூச னைக ளெல்லாம் பெருமையிற் பலநாட் பேணிப்
பொன்புனை மன்று ளாடும் பொற்கழல் நீழல் புக்கார்

18. நீண்டசெஞ் சடையி னார்க்கு நினைப்பினாற் கோயி லாக்கிப்
பூண்டவன் பிடைய றாத பூசலார் பொற்றாள் போற்றி
யாண்டகை வளவர் கோமா னுலகுய்ய வளித்த செல்வப்
பாண்டிமா தேவி யார்தம் பாதங்கள் பரவ லுற்றேன்.

சிவமயம்.

# பூசலார் நாயனார் சரித்திரம்

'சான்றோ ருடைத்து' என்னும் பெருமை வாய்ந்த தொண்டை நாட்டிலே சீலம் நிறைந்த மறையவர் சிறப்போடு வாழ்ந்திருந்த செல்வம் நிறைந்த ஊர் *திருநின்றவூர் என்பது. அந்தத் திருநின்றவூரிலே, சிவபெருமான் திருவடியில் மாறாத அன்பு வளர்ந்தெழுந்த மனத்தவரும், வாய்மை வழியைக் காட்டும் வேத நீதிக் கலைகளை உணர்ந்த அறிவினரும், சிவனடியார்க்குப் பணி செய்வதே தக்கதென உணர்ந்து தாம் எவ்வகையால் தேடிய பொருள்களையும் அவர்க்கே அளித்து வந்தவருமான ஒரு பெரியார் இருந்தார். அவர் தம்மிடத்துப் பொருள் இல்லாமையையும் எண்ணாது, சிவபிரான் மகிழ்ச்சியுடன் வீற்றிருந்தருளுவதற்கு ஒரு கோயில் கட்டுதற்கு எண்ணங் கொண்டார். அந்த எண்ணத்துடன் பல இடங்களிற் பொருள் பெற முயன்றார். பொருளோ கிடைக்கவில்லை. என் செய்வேன் என மனம் நொந்தார். நன்று; என் மனத்தாலேயே பொருள் சேர்ப்பேன்; மனத்திலேயே கோயில் ஒன்று எடுப்பேன் என ஓர் உறுதி கொண்டு வேண்டிய பொருள்களை மனத்திலேயே திரட்டிச் சேர்த்தார். கட்டடத்துக்கு வேண்டிய கல், மரம் முதலிய சாதனங்களைச் சேர்த்தார். தச்சர், கொல்லர் முதலிய பணியாளர்களையும் மனத்திலே ஏற்பாடு செய்தார். ஒரு நல்ல நாளிற் கட்டடத்தை மனத்தாற் கட்ட ஆரம்பித்தார். ஆகம விதிப்படி அஸ்திவாரம் நியமித்தார். இரவிலும் துயில் கொள்ளாமல் கட்டட வேலையை ஒன்றன்பின் ஒன்றாக மனத்திலே பூர்த்தி செய்து வந்தார். ஸ்தூபி, மதில், கிணறு, குளம் முதலிய மனத்தினால் வகுத்தார். இங்ஙனம் பலநாள் மனத்தினால் பல பாகங்களையும் அமைத்து வகுத்துக் கோயில் வேலைகளை முற்றுவித்தார். பின்பு தாம் கட்டிய மனக் கோயிலில் இறைவனைப் பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் செய்ய ஒரு தக்க நாள் குறித்தார்.

இது இப்படி யிருக்க காடவர் ராஜன் காஞ்சிபுரத்தில் சிவபிரானுக்குக் கற் கோயில் ஒன்று கட்டிப் பெருந் தொகை செலவிட்டு லிங்கப்பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் செய்ய எண்ணித் தக்கதொரு நாள் குறிப்பிட்டு வைத்தான். அவன் ப்ரதிஷ்டை செய்ய எண்ணிய தினத்துக்கு முன் நாள் இரவில் சிவபிரான் அவனுடைய கனவில் தோன்றி "திருநின்றவூரிலுள்ள அன்பன் "பூசல்" என்பான் பல நாள் நினைந்து நினைந்து செய்த பெரிய ஆலயத்துக்கு நாம் நாளைக்குப் புக இருக்கின்றோம். நீ இங்கு செய்ய இருக்கும் பிரதிஷ்டை வேலையை

---

* இது 'தின்னனூர்' என வழங்கும்; சென்னை அறக்கோணம் ரெயில் பாதையில் சென்னைக்கு 20 மைல் தூரத்திலுள்ளது ரெயில் ஸ்டேஷன்.

உ



வேலு மயிலுந் துணை

# நெய்வேலி வில்லுடையான்பட்டி தலவரலாற்றுச் சுருக்கமும் அருட்புகழும்



சுபகிருது௵ பங்குனி உத்திரத் திருவிழா (7—4—63)
அன்று வெளியிடப்பட்டது.

விலை 50 காசு

உ
வேலுமயிலுந்துணை.

# நெய்வேலி வில்லுடையான்பட்டி
# தலவரலாற்றுச் சுருக்கமும் அருட்புகழும்

---

ஆசிரியர்கள் :
உயர்திருவாளர் S. S. சென்றாயனும்
அருட்கவி S. V. சேதுராமனும்

வெளியிடுவோர் :
**N. நாராயணய்யர்,**
G-51, பார்க் வெஸ்ட் ரோடு, பிளாக் நெ. 24,
புதுநகர், நெய்வேலி-1.



சுபகிருது ஸ்ரீ பங்குனி உத்திரத் திருவிழா (7-4-63) அன்று
வெளியிடப்பட்டது.

 ஏப்ரல் 1963 [விலை 50 காசு.

முதற் பதிப்பு : 2000 பிரதிகள் — ஏப்ரல் 1963

இந்நூல் கிடைக்குமிடங்கள் :

ஸ்ரீ S. S. சென்றயனுர்,
C-96, சுரங்கச் சாலை, பிளாக் நெ. 24,
நெய்வேலி-1.



ஸ்ரீ S. V. சுப்ரமண்யம்,
141, லிங்க செட்டித் தெரு,
சென்னை-1.



ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி அய்யர்,
போஸ்ட் மாஸ்டர்,
வேலுடையான்பட்டி.

வேலும் மயிலும் துணை

# முன்னுரை

நெய்வேலி வில்லுடையான்பட்டி தலவரலாறு சுருக்கமும் அருட்பாடல்களும் என்னும் இந்நூலிலுள்ள அருட்பாக்களை அருளியவர் அருட்கவி S. V. சேதுராமனார் ஆவர். இவர் தஞ்சை மாவட்டத்திலுள்ள நாடாகுடி என்ற ஊரின்கண் அவதரித்தவர். சென்னை மாநகரில் கல்வி பயின்று, பணிபுரிந்து வருகிறார்.

இவரும் இவர் குடும்பத்தாரும் ஸ்ரீலஸ்ரீ வள்ளிமலை சச்சிதானந்த சுவாமிகளின் அடியவர்கள் ஆவர். சுவாமிகளின் தனிக்கருணையினால் இவர் திருப்போரூர் முருகவேளிடமிருந்து "ஹர ஹரோ ஹரா கும்பி 108" என்ற பாடலை கிடைக்கப் பெற்றார். இத்தெய்வ நூலை கிடைக்கப்பெற்றபின் இவருக்கு எல்லாம் வல்ல இறைவனின் பூர்ண அருள் கிடைக்கப்பெற்றவராய் விளங்குகிறார்.

இவர் ஆண்டவனின் முன் நிற்கும்போது தன்னை மறந்து திருவருளில் தோய்ந்து தமது சுய முயற்சி சிறிதும் இன்றி அருட்பாடல்கள் இவர் உள்ளத்திலிருந்து இயல்பாக ஊற்றெடுத்துப் பொங்கி வழிகின்றன. இவர் படித்திராத, கேட்டறிந்திராத பல சமயச் செய்திகளும், வரலாறுகளும், பல்வகைப்பட்ட பா இனங்களும் பாடப் பெறுவது அருளினால் பொங்கி வழிந்தவை என்பதற்குச் சான்று வேறு தேவையில்லை.

முருகக் கடவுள் தமிழ்க் கடவுள், தமிழ்ப் பிரியர், தமிழ் விநோதர், தமிழ்க் குரு, தமிழ்ப் புலவர், தமிழ்ப்பித்தர், முத்தமிழால் வைதாரையும் வாழவைப்பவர். இவ்வுண்மையினை மெய்ப்பிக்க அருட்கவி அவர்களை இங்கு வந்து தம்மை பாடச் செய்து தம் வரலாற்றையும், தமிழ்ப்பற்றுக் கொண்டவர் என்பதனையும், தம் ஆற்றலையும், தம்மை அன்புடனழைப்பவர்களை ஆதரிப்பவன் என்பதனையும், நெய்வேலி இனி உலகில் சிறப்பினைக் காணத் திகழ இருப்பதனையும் இவ்வருட்பாடல்களில் வெளிப்படுத்தியுள்ளதைக் காணலாம்.

இவரது தமையனார் அருளிசை S.V. சுப்ரமணியம் அவர்கள் உடனிருந்து பாடும்பொழுது பிழையற குறித்துக்கொள்வது நம் பெரும் பாக்கியமாகும். இப்பாடல்களுக்கு பதவுரை, கருத்துரை இவரே எழுதியிருப்பது மிகப் போற்றத்தக்கது.

திருப்போரூர் முருகனால் அருட்கவி அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட "ஹர ஹரோ ஹரா கும்பி 108" என்னும் புத்தகம் அன்பர் திரு. S. S. சென்றாயன், C-66, சுரங்கச்சாலை, பிளாக் 24, புதுநகர், நெய்வேலியில் கிடைக்கும். இதில் இவர் அருள்பெற்ற முறையைக் காணலாம். இப்பாடல் பாராயணத்திற்குரியது.

இந்நூலை பக்த கோடிகள் அனைவரும் பெற்று முருகனைத் துதித்து அருள்பெற்று உய்யுமாறு வேண்டுகிறேன்,

F-12, அஞ்சல் அலுவலகச்சாலை,
பிளாக் 16.
புதுநகர், நெய்வேலி-1.

இங்ஙனம்,
B. சுப்ரமணியம்.

ஓம்

ஸ்ரீ வெட்டுடையான்பட்டி சுவாமிகள் துணை

# வில்லுடையான்பட்டி

## தலவரலாறு



வேலுடையான்பட்டி, வேல்ராம்பட்டு என்று வழங்கப்படுகின்ற வில்லுடையான்பட்டி என்ற தலமானது தென்னாற்காடு மாவட்டத்தில் வடலூர் புகைவண்டி நிலயத்திற்கு வடக்கே நாலுகல் தொலைவிலும் நெய்வேலி புதுநகருக்குக் கீழ்ப் புறத்திலும் அமைந்துள்ளது.

இக்கோயிலின்கண் முருகப்பெருமான் வள்ளியம்மை, தேவசேனை சமேதராய் எழுந்தருளியுள்ளார். ஸ்ரீமுருகன் திருக் கரங்களில் வில்லும் அம்பும் ஏந்தியவராய் விரிசடையுடனும் இடுப்பில் சல்லடத்துடனும் வேடர் கோலத்தில் ஒருமுகத்துடன் காட்சி அளிக்கிறார். வள்ளி தெய்வயானை இருவரும் இருபுறத்திலும் ஒரே கல்லில் நின்ற கோலத்தில் விளங்குகின்றனர். இது சுயம்புவாய் உள்ளது.

உற்சவமூர்த்தியும் திருக்கரங்களில் வில்லும் அம்பும் கொண்டு விரிந்த சடையுடன் வேடர் கோலத்தில் வள்ளி தெய்வயானையோடு மிக அற்புதமாய் நிற்கிறார். மேலும் விநாயகர், திரிசூலம், நடராஜர், சோமாஸ் கந்தர் முதலிய உற்சவ மூர்த்திகளும் உள்ளன. உட்பிராகாரத்தில் விஸ்வநாதர், விசாலாட்சி, தண்டபாணி ஆலயங்களும் தனித்தனியே அமைந்திருப்பதுடன் வடகிழக்குப் பக்கத்தில் சனி பகவானின் விக்கிரகமும் அமைந்து உள்ளது. வெளிப்பிராகாரத்தில் கலியாண மண்டபமும் நவக்கிரகங்களின் கோயிலும் விநாயகர் கோயிலும் யாகசாலையும் மடப்பள்ளியும் தனித்தனியே

அமைந்துள்ளன. மேலும் இக்கோயிலுக்குத் தென் கிழக்கில் ஐயனுருடைய குதிரைக்கு ஒரு கோயிலும் வீரனுக்கு ஒரு கோயிலும் சேர்ந்து அமைந்துள்ளன. மேலும் பலகுதிரை உருவங்களும் அமைந்துள்ளன. கோயிலின் அருகில் நல்ல தொரு நீரோடை ஓடுகிறது. படிக்கட்டுகளோடு ஒரு பெரிய திருக்குளமும் உள்ளது. கோயிலுக்குக் கிழக்கே அரச மரமும் வேப்ப மரமும் கூடியதாய் அதன்கீழ் நாகரும் விநாயகரும் பிரதிஷ்டை செய்யப்பட்டு நல்ல தொரு மேடையுடன் வழிபடும் முறையில் அமைந்துள்ளது. தலவிருக்ஷமும் வன்னி மரம்.

இத்தலத்தின் விசேடமானது ஸ்ரீ முருகன் தனக்குரிய வேலாயுதத்தைத் திருக்கரத்தில் கொள்ளாது வேடர் உருவத்தில் கையில் வில்லும் அம்பும் உடையவராய் இடுப்பில் கல்லடத்துடன், வள்ளி தெய்வயானை இருவரும் பக்கத்தில் நிற்க திருக்காட்சி அளித்து அருள்பாலிப்பது ***ஒப்பற்ற*** ஒரு அற்புத காட்சியாகும். (இத்தகைய காட்சியை ஸ்ரீ அருணகிரி நாதருக்குத் திருச்செந்தூரில் செந்தில் ஆண்டவனே "காலனார் வெங்கொடுந் தூதர்" என்ற திருப்புகழில், "சூலம் வாள் தண்டு செஞ்சேவல் ***கோதண்டமுஞ்*** சூடு தோளுந் தடந் திருமார்பும் தூயதாள் தண்டையுங் காண ஆர்வஞ் செயுந் தோகைமேல் கொண்டு முன்வர வேணும்" என்று திருப்புகழில் வேண்டுவதினுல் முருகப்பெருமான் தன் பன்னிரு கரங்களில் வில்லையும் ஒரு ஆயுதமாகக் கொண்டுள்ளார் என்பதை அறிகிறேம்.)

பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இம்மாவட்டமானது அடர்ந்த பெருங்காடாக இருந்தது. அப்போது அழகே உருவமான ஸ்ரீ முருகன் கையில் வில்லும் அம்பும் ஏந்திய வராய் வேடர் கோலத்தில் காட்சி அளித்திருக்கிருர் போலும். மேலும் ஸ்வாமி வளையாபதி சாந்தயோகி என்பவர் இங்கு வந்து தங்கியபோது தனக்கு "அருட்காட்சி ஈந்தருளிய முருகனின் அடிதொழுது அந்த ஆவேசத்தில் இந்நூலை எழுதினேன்" என்று எழுதியுள்ள நூலிலிருந்து நாம் அறிந்து கொள்வதாவது :—

'ஸ்ரீ சுப்ரமணியர் வள்ளியை மணம் செய்து கொள்ளச் சென்றபோது தேவர்களும் முனிவர் முதலானவரும் தேடி, சிதம்பரத்திலும் காணாது துதிக்க, "வடமேற்கே இரண்டரை காத தூரத்தில் நாம் காட்சி தருவோம்" என்று திருவாய் மலர்ந்தருளினர். உடனே இடும்பன், வீரன், ஐயனர் மூவரும் புறப்பட்டு வர ஒரு அழகிய சோலையின் இடையே ஜோதி வடிவைக் கண்டுகளித்தனர் பின்பற்றி வந்த சப்த கன்னிமார், முனிவர்கள், தேவர்கள் பூசாரிகுப்பம் அல்லது கன்னிமார் கோயில் என்ற இடத்திலிருந்தே தரிசனம் செய்தார்கள். தேவர்களும் முனிவர்களும் வேண்ட வள்ளி தெய்வயானையுடன் வில்லும் அம்பும் கொண்டு அழலுருவில் காட்சி அளித்தார். "வில்லும் அம்பும் கொண்டு காட்சியளித்ததால் இத்தலம் ***"வில்லுடையான் பட்டி***" எனப் பெயர் பெறும் என அருளினர், பிறகு வேலாயுதத்தை ஊன்றி ஒரு நீரோடை உண்டாக்கி 'இது சரவண தீர்த்தமாகும்' எனத் திருவாய் மலர்ந்தார். இதனல் இப்பொழுது "வேல் ஊன்றினன் பட்டி" என்றும் "வேலுடையான் பட்டி" எனவும் பெயர் வழங்கி வருகிறது. பிறகு ஒரு கல்லுருவமாய் மாறி பூமியின்கண் மறைந்தருளினர்.

தற்போது 'வில்லேஜ் சமுர்த்தியார்'. என்ற பிரிவினரின் மூதாதையர்கள் சுமார் எழுநூறு ஆண்டுகளுக்கு முன் இக்கோயிலைக் கட்டியதாகக் கூறப்படுகிறது. இன்றும் கோயிலில் திருவிழாக்களின் போது இப்பரம்பரையின் தலைவருக்கு முதல் மரியாதை அளிக்கப்படுகிறது. இவர்கள் வன்னியர் வகுப்பைச் சார்ந்தவர்களாவர். அருட்கவி சேதுராமனர் அவர்கள், "பல்லவ வேந்துக்குள் மாகலை வல்லவனுஞ் சித்ர காடவ பல்லவன் வேண்டிச்செய் கோயில எனையாள்வாய்" என்று அருள் வாக்காய் அருளியுள்ளார். இதனல் பல்லவ அரசருள் சித்ரகாடவ பல்லவன் என்பவர் விரும்பிக் கட்டிய கோயில் என்பது புலப்படுகிறது. இன்றுள்ள சமுர்த்தியார்களே பல்லவ பரம்பரையினர் என்று சிலர் கூறுகிருர்கள்.

இவ்வரசனுடைய பசுக்கள் பால் கறவாமையைக் கண்ணுற்று, காட்டின் நடுவில் பசுக்கள் முருகப்பெருமான்

வள்ளியம்மை தேவசேனை சமேதராய் மறைந்த இடத்தில் தாமேபால் சொரிவதைக் கண்டார். அந்த இடத்தை தோண்டிப்பார்த்தார். ஒரே கல்லில் வேடர் கோலத்தில் கையில் வில்லும் அம்பும் கொண்டு இரு தேவிகளுடன் ஸ்ரீமுருகப் பெருமான் இருப்பதைக்கண்டு அதிசயத்தார். மண்வெட்டியால் முதலில் வெட்டியபோது தோளின் மேல் மண் வெட்டிபட்டு இரத்தம் கசிந்த இடம் இன்றும் யாவரும் காணத் தழும்பு உள்ளது. அன்றிரவு கனவில் கோயில் கட்ட உத்தரவு பெற்றவராய் பெருமகிழ்வோடு தற்போதுள்ள கோயிலை பெரியதாகத் திட்டமிட்டுத் திருப்பணி செய்து வழிபட்டு வரலாயினர்.

இதன் பிறகு வளவனூர் திரு. அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் வகையறாக்களால் நவக்கிரகங்களின் கோயிலும், கடலூர் திரு. ந. முத்துசாமி செட்டியாரவர்கள் துணைவியாரால் மண்டபமும், சென்னப்ப நாய்க்கன் பாளையம் திரு. இராஜ கோபால் செட்டியாரவர்கள் மூதாதையர் காலத்திலிருந்து தள வரிசைப்பணிகளும் நடந்திருப்பதாகத் தெரிகிறது.

இக்கோயிலுக்குத் தெற்கே இரண்டு கல் தொலைவில் சேப்பளாநத்தம் என்கிற செப்ப இளாநத்தம் என்ற இடத்தில் ஐயனார் கோயில் உள்ளது. சமீபத்தில் சமரச சுத்த சன்மார்க்க சங்கம் தோற்றுவித்தருளிய இராமலிங்க அடிகளார் ஏற்படுத்திய சத்திய ஞானசபையும், குறிஞ்சிப்பாடிக்கருகில் கன்னியர் கோயில் என்கிற பூசாரிகுப்பத்தில் சக்தியின் வடிவமாகிய பச்சை வாழியம்மன் கோயிலும், வெள்ளையங்குப்பத் (நெய்வேலி 27-வது பிளாக்) தில் ஸ்ரீசுப்ரமணியர் கோயிலும், சீனிவாசப் பெருமாள் கோயிலும் அமைந்திருக்கின்றன.

நாயன்மார்களும் ஆழ்வார்களும் தோன்றி அருள் பாலித்த இம்மாவட்டத்தில் நடராஜப் பெருமான் சதா திரு நடம் புரிகின்ற உலக மையமாக விளங்கும் சிதம்பரத் திற்கும் ஐம்பூதங்களில் நடுவாகிய ஜோதி ரூபத்தில் ஞானிகள் கண்டு தரிசிக்கத் தக்கதாகும் சத்திய ஞான சபை விளங்கும் வடலூருக்கும் அருகே அமைந்துள்ள வேலுடையான்பட்டி

என்னும் இத்தலத்தில் இறைவன் வேட உருவத்தில் கிரியா சக்தி, இச்சா சக்தியாகிய தெய்வயானை வள்ளியுடன் அருள் பாலிக்கின்ற நிலை, நெய்வேலியில் இருந்து உலகம் உய்ய உழைக்கும் பலவிதத் தொழில் ஞானம் நிறைந்த அடியார்களை மாயையிலிருந்து விடுவித்து ஆட்கொள்ளும் பொருட்டே ஆகும் என நாம் நம்புவோமாக.

இத்தன்மை வாய்ந்த புண்ணியதலமாகும் வில்லுடையான் பட்டிக்கு அருட்கவி சேதுராமன் அவர்கள் 26—2—63 தேதி வருகை தந்து ஸ்ரீசிவ சுப்ரமணியத்தைத் தரிசனம் செய்து அருட்கவி அருளிச் செய்தனர்.

அவரது அருட்கவியில் "உயர் வில்லுடையான் பட்டி மேவிய பெருமானே" என்றும், "நெய்வேலி யொர் பாங்கர்க் கண் நீள்முது வேலுடையான் பட்டி வாழ்வுறு பெருமானே" என்றும் வருவதனால் இத்தலத்தின் பெயர் அறியலாகும்.

"வேடனுயவன் வேலுடையான் பட்டி ஆடகக் குன்றை ஆதரஞ் செய்ம்மினே" என்பதனால் வேட உருவத்தில் தரிசனம் தருகிறார் என்பதை அறிகிறோம்.

"நெய்வேலி வில்லுடையான் பட்டி வேடனைப்போலி யின்றிப்புனைந்துரை செய்ம்மினே" என்பதனால் உண்மையான அன்புடன் துதிக்க வேண்டுமென்றும் அப்படித் துதித்தால்,

*"நல்ல காலம் நமக்குண்டு ஞாலத்தீர்!*
*அல்ல வற்றை அகற்றி அருள்கென*
*மெல்ல வேலுடை யான்பட்டி வேளிடம்*
*சொல்ல வல்லிரேற் சோகம் தொலையுமே"*

என்பதனால் நம் சோகம் தொலைந்து சுகம் உண்டாகும் என்றும் தெள்ளத் தெளிவாகிறது.

பொதுவாக இக்கோயிலைக் காணும்போது இது மிகப் பழமையானது என அறியலாகும். இதன்கண் விசாலமான இடமும் மண்டபமும் யாகசாலையும் அமைந்துள்ளன. பெரும் கற்களால் கோயிலும் மதிற்சுவரும் அமைந்துள்ளன.

ஓடையில் கற்களால் அமைந்த சிறந்த படித்துறை அமைந் திருந்ததின் ஒரு பகுதி இன்றும் காணக் கிடக்கிறது. முன்பு கூறியபடி அதன் அருகில் மிகப் பெரியதொரு திருக் குளம் நாற்புறமும் படிக்கட்டுகள் அமைக்கப்பட்டு சிறப் புடன் விளங்கியதாகவும் இதன்கண் ஆண்டுதோறும் தெப்ப உற்சவம் மிகச் சிறப்பான முறையில் நடந்துவந்ததாகவும் முதியவர் சிலர் கூறுகின்றனர். இன்றும் தெப்ப உற்சவம் நடைபெற்று வருவது உன்னற்பாலது. சமீப காலத்திற்கு முன் இத்தலத்தில் புகழ்பெற்ற ஒரு நட்டுவனுர் இருந்தார் என்றும் அவரிடம் நம் நாட்டின் பல பாகங்களிலிருந்தும் பெண்கள் வந்து நாட்டியம் பயின்று சென்றதாகவும் தெரி கிறது. இக்கோயிலில் தேவதாசிகள் இருந்தார்கள் என்பதும் கருதத்தக்கது. மேலும் இப்பொழுது இருக்கும் தேர் அழகிய சிற்பங்கள் நிறைந்து விளங்குவது கருத்தில் கொள்ளத் தக்கது. இக்கோயிலுக்கு சென்னை, கடலூர், பண்ருட்டி முதலிய வெளியூர்களில் உபயக்காரர்கள் இருந்து திருவிழா நடத்துவதானது நாம் அறிந்ததாகும். பங்குனித்திங் களில் பத்து தினங்கள் பெருவிழாவாகப் பல கிராமத்தார்கள் ஒன்று சேர்ந்து நடத்திவருவதையும் காவடிகள் பல எடுத்து ஆடுவதையும் மிகப் பெரியதான பாதக்குறடு முதலியன காணிக்கையாக செலுத்துவதையும் நாம் இன்றும் காணலாம். இக்காரணங்களை எல்லாம் நாம் மனதில் கொண்டால் இத்தலம் மிகப் பழமையானது என்பதனை மறுக்க இயலாதது ஆகும். மேலும் "***நீள்முது*** வேலுடையான்பட்டி" என்னும் அருட் கவி சேதுராமனுர் அருள்வாக்கைக் கருத்திற் காணும்பொழுது இத்தலத்தின் தொன்மை விளங்கும்.

நம் எல்லோரையும் மிக ஆச்சரியத்தில் ஆழ்த்துமாறு இப்பதிக்கு "நெய்வேலி" என்ற பெயரை யார் வைத்தார் களோ தெரியவில்லை. மிக யோசனையுடன் பிற்காலத்தில் இது அடையும் சிறப்பினை அறிந்து தீர்க்கதரிசனமாக இதற்கு யாரோ எக்காலத்திலோ இப்பெயர் இட்டுள்ளார்கள். நெய் வேலி என்பதானது நெய் + வேலி எனப் பிரித்து நெய் = எரி பொருள் (லிக்னைட்), வேலி = இடம். எரியக்கூடிய பொரு ளாகிய நிலக்கரி உடைய இடம் என்ற பொருள் பொதிந்

துள்ள இப்பெயரினை நாம் இன்று நேரில் காண்கிறோம். மேலும் வடலூர் இராமலிங்க அடிகளார் "பொன்விளையும் பூமி" என்று கூறிப் போந்துள்ளதின் உண்மைப் பொருள் இப்பொழுது தெள்ளெனத் தெரிகிறது. இக்கரியின் நிமித்தமாக தோன்றும் பல தொழில்களாலும் அதன் மூலம் கிடைக்கப் படும் பொருள்களாலும் (பொன்) நம் நாடு மிகவும் பொரு ளாதாரத் துறையில் உயர்வு பெற இருப்பதை யாவரும் அறிவார்கள்.

நெய்வேலி வட்டத்தைச் சற்றுச் சிந்தித்துப் பார்த்தால் இதன் சிறப்பான அம்சம் தெரியவரும். நாம் இன்று தோண்டி எடுக்கும் லிக்னைட் என்கிற பழுப்பு நிலக்கரியானது பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் இம்மாவட்டம் ஒரு பெரிய அடர்ந்த காட்டுப்பிரதேசமாய் இருந்திருக்க வேண்டு மென் பதும் காடுகள் பலமுறை அழிந்து பூமியின் அதிர்ச்சியாலும் அழுத்த சக்தியாலும் இன்று நமக்குக் கரியாகக்கிடைக்கிறது என்பதும் நாம் யாவரும் அறிந்ததாகும். காடாக இருந்த காலத்தில் இதன்பால் அழகே உருவமான முருகன் கையில் வில்லும் அம்பும் விரிந்த சடையுடனும் இடுப்பில் சல்லடத் துடனும் வேடர் கோலத்தில் காட்சி தந்தருளியுள்ளார். முதன் முதலில் இவர் ஜோதி உருவத்தில் தோன்றினர் என்றும் பிறகு பூமியின்கண் மறைந்தார் என்றும் அறிகிறோம். மறைந்தவரைத் தோண்டி எடுத்துக் கோயில் அமைத்து வழிபட்டனர். நாம் இன்று பூமியில் மறைந்து கிடக்கும் பொருள்களை எடுத்து நம் உலகவாழ்விற்கு வேண்டிய பொரு ளையும் பொன்னையும் பெறுகிறோம். இது இன்னும் அதிகமாக வளர்ச்சி பெற்று நம் நாடும் உயர்வு பெறும் என்பது திண்ணம். இங்கு "வேலை யீதர வாய்ந்துற்ற பூமி நெய்வேலி வேலுடை யான்பட்டி மேவிய பெருமாளே" என்பதையும் "மேதினி யோங்கற்கு மேவு நெய்வேலி யொர்பாங்கர்க்கண் நீள்முது வேலுடையான்பட்டி வாழ்வுறு பெருமாளே" என்ற அருள் வாக்கையும் காணலாம். இத்தகைய உயர்ந்த நிலையை அடையும் நம் நெய்வேலியில் பலதிறப்பட்ட மக்கள் பல துறைகளில் ஆற்றல் பெற்றவர்களாய் பணி புரிகின்றனர். இவர்களின் உலக வாழ்க்கையும் ஆன்ம வாழ்க்கையும்

உயர்வு பெறத்தக்கதாய் அமைந்துள்ளன. வேலுடையான் பட்டி சிவசுப்ரமணியன் அழகுருவமாய்க்காட்சி அளித்ததையே பின்பற்றி வள்ளலார் அவர்களும் ஜோதி தரிசனம் ஏற்படுத்தி சத்திய ஞான சபையை இங்கு நிறுவியுள்ளாரோ என வியப்படைகிறோம். மேலும் கிறிஸ்தவர்களும் முகமதியர்களும் புத்த மதத்தினரும் ஹிந்துக்களும் "***ஜோதி***" உருவத்தை ஏற்றுக்கொள்கின்றனர். இதனால் யாவரும் எந்தமதத்தினரும் எந்தக் கொள்கையுடையவரும் வழிபட ஞானசபை அமைந்திருப்பது சிறப்பினதாகும். இத்தகைய ஆண்டவன் அருளை நினைத்து உண்மை நெறியினை பின்பற்றுபவர்களுக்கு வேலுடையான்பட்டி காவலன் கையில் வில்லும் அம்பும் கொண்டு நம்மைக் காத்து சோகத்தை (பிறப்பை)த் தொலைத்துச் சுகத்தை அருளுவான் வேண்டியே இப்பதிக்கு அருகில் கோயில் கொண்டுள்ளான் போலும்!

இத்தல அமைப்பானது மேலும் ஆச்சரியப்படும்படி அமைந்துள்ளது. இத்தலத்தின் அடியில் மிகுந்த நீரும் அதன்மேல் எரிபொருளாகிய பழுப்பு நிலக்கரியும் இருக்க அவற்றின் மேல் தான் இருசக்திகளுடன் திருக்கோயில் கொண்டுள்ளார் முருகன். பக்கத்தில் வற்றா நீரோடை அமைந்துள்ளது. இந்நிலையைக்காணும்போது படை வீடுகளில் ஒன்றாகிய திருச்செந்தூர் தலத்தின் ஞாபகம் யாவருக்கும் வரும்.

உலகத்தவர் அனைவரின் கவனத்தையும் பெற்று விளங்கி வருகிற நெய்வேலிப் புதுநகரின் கண் கீழ்பால் அமைந்துள்ள வேலுடையான்பட்டிக் கோயிலானது இங்குள்ள அடியார்களின் தொண்டினால் சீரும் சிறப்பும் பெற்று வருகிறது. தற்போது கோயிலினுள் நல்ல காற்றோட்டமும் வெளிச்சமும் வருமாறு செப்பனிடப்பட்டுள்ளது, சுவாமி உலாவர சகடை ஒன்று செய்யப்பட்டுள்ளது. மூலவருக்கும், விஸ்வநாதர், விசாலாட்சி, விநாயகர் முதலிய விக்கிரஹங்களுக்கும் வெள்ளி கவசங்கள் செய்யப்பட்டுள்ளன. வெளிப்பிராகாரத்தில் விநாயகருக்குத் தனி ஆலயமும் கட்டப்பட்டு வருகின்றது. நவராத்திரி, கந்தர்சஷ்டி, தைபூசம் முதலிய

விசேட உற்சவங்களில் லட்சார்ச்சனை நடைபெறுகிறது. மயில் வாகனம் புதுப்பிக்கப் பட்டு அதன்மேல் ஆண்டவன் அமர்ந்து புதுநகரின் கண் உலாவந்ததை யாவரும் தரிசித்து அருள் பெற்றனர். மேலும் அடியவர்கள் ஊக்கம் அதிகம் செலுத்தி அழியும் நிலையிலுள்ள பக்கத்து கோயில், நீரோடையிலுள்ள படித்துறை, திருக்குளம் ஆகியவற்றைச் செப்பனிட வேண்டும்.

இவ்வில்லுடையான்பட்டி நெய்வேலி கார்ப்பரேஷனால் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. இக்கோயிலின் அடிப் பாகத்தில் பழுப்பு நிலக்கரி தோண்டி எடுக்கக்கூடிய அளவில் இல்லை என்று தெரிகிறது. எவ்வாறாயினும் கார்ப்பரேஷன் முன்வந்து மிகவும் பழமையாய்ச் சக்தி வாய்ந்த தெய்வம் விளங்கும் இக்கோயிலை நல்லமுறையில் சீர்திருத்தி என்றும் விளங்குமாறு செய்வது மிகவும் நல்லதாகும் என்று அடியார் களின் சார்பாக கேட்டுக்கொள்கிறேன்.

இங்ஙனம்,

**S. S. ரெங்கையன்,**
ஆசிரியர்,
N. L. C. உயர்நிலைப்பள்ளி,
புதுநகர்.

நெய்வேலி - 1
2—4—63



உ

# அருட்புகழ்
## (26—2—1963)
### நெய்வேலி—வில்லுடையான்பட்டி முருகவேள் திருக்கோயில்

# முருகவேள் திருமுன்

சௌராஷ்டிரம்] 1. ஆளப்பெற [திரிபுடை

தய்யதனந் தத்த தானன
தய்யதனந் தத்த தானன
தய்யதனந் தத்த தானன தனதான

கல்வமராம் பிச்சி கூவிள
மௌவல்குராங் கொட்டி மைமலர்
கள்ளவிழ்பூஞ் செச்சை கோடல்மொய் தமலாடாரம்

கைதைவிளாங் கற்பூ ராருவின்
நொய்யலர்கோங் கிற்பொ னேர்மலர்
கைரவமாம் பற்ற ளிர்மலர் கரவிரம்

பல்வகையாம் புட்ப ஜாதிகள்
வௌவமொடேந் தூற்ற தோள்பிசை
பள்ளுவமேந் திக்கை யார்சரம் உடையானோ—

பல்லவவேந் துக்குள் மாகலை
வல்லவனுஞ் சித்ர காடவ
பல்லவன்வேண் டிச்செய் கோயில் எனையாள்வாய்,

செல்வமுளான் பொற்கு பேரனுர்
கல்வியெலாங் கற்ற ஊரர்சொல்
தெய்விகவாஞ் சைச்சி நேகிதர் எனவேபேண்—

செவ்வியகாஞ் சிப்பு ராதனர்
பவ்வியசாந் தத்து மாமகிழ்
திவ்வியதாம் பத்ய வாழ்வினன் முடிமேலே;

வில்வமுளான் புச்சி தாதகி
வெள்ளிலெலாங் கற்றை வேணியில்
வெள்ளிரவோன் பக்கல் சூடிறை மிகுநூப—

வெல்கொடியான் பச்சை மேனிகொள்
தொல்கொடியான் புத்ர னே! உயர்
வில்லுடையான் பட்டி மேவிய பெருமாளே.

வராளி) 2. ஆட்கொள்ளப்பெற (திரிபுடை

தானதனுந் தத்த தானன
தானதனுந் தத்த தானன
தானதனுந் தத்த தானன தனதான

ஆணவமோங் குற்ற வாழ்வினில்
ஆதரவாந் தற்ப மாயையில்
ஆயிரமாம் பற்று மாசையும் அகலாதே-
ஆழ்வுறுவேன் கெட்ட நோய்களில்
மாழ்குறுவேன் பற்று டாகமம்
ஆரணநான் கற்றி லேனக விடமூடே;

காணவமாம் பித்த ரோடுழல்
காரியனேன் கற்பி லேனுன
கால்பணியேன் கற்ற மூடரொ டெ துநாளுங்-
கால்தொடர்வேன் பச்சை மாமிசை
நீவரல்காண் டற்கெ னுவொரு
காலுமெணேன் பித்த னேனெனை இனிதாள்வாய்;

மாணவமாஞ் சொற்ற மாமணி
பூணழகாம் பொற்பின் மார்பக
மாயவனும் பச்சை மால்திரு மருகோனே-
மாதவசாந் தத்து யோகியர்
பாதகமாந் தப்பி லாரவர்
வார்கழல்பூண் டர்ச்ச னைகள் புரிவார்தாம்;

வேணதெலாம் பெற்று வாழ்வுற
வீறுடனெய்ந் தற்பு நாரிகள்
வேளையொடாங் குச்செய் வேதியர் தலைவோனே-
மேதினியோங் கற்கு மேவுநெய்
வேலியொர்பாங் கர்க்கலை நீள்முது
வேலுடையான் பட்டி வாழ்வுறு பெருமானே;

மத்யமாவதி) 3. திருவருளை வியத்தல் (கண்ட ஏகம்

தத்த தானதனுந் தத்த தானதனுந்
தத்த தானதனுந் தனதான

கற்ற மாதவர்தாஞ் சொற்ற தூநெறிபோங்
கற்பி லேனடியேன் கடைநாயேன்-
கற்றை வார்சடைவாய்ந் துற்ற வேலவனுங்
கர்த்த னே! உனைவேண் டுவதேது;

சுற்ற மாய்நனிசூழ்ந் துற்ற மாதுணையாஞ்
சுத்த னே!இவன்வேண் டுவயாவும்—

சொற்றி டாமலெலாங் கற்று நீயறிவோன்
துற்று நாயடியேன் சொலலேதோ;

பெற்ற மேறிடுவான் பிச்சை போயுழல்வான்
பித்தர் போலவெலாந் திரிவான்மா—

பெத்தர் தாமறியான் புற்ற ராஅணிவான்
பெற்ற சேயவனுஞ் சிறியோனே;

பற்ற தார்சிவமாஞ் சத்தி காசியிலோம்
பத்ர காளிநெடுஉங் கணிபாலா—

பட்டை நீறணிசாந் தத்த வேலுடையான்
பட்டி வாழ்குருவாம் பெருமாளே.

பியாகடை] 4. திருவடிமலர் பெற [கண்ட திரிபுடை

தய்ய தனந் தத்தத் தனதான

1 பிள்ளையெலாம் பெற்றிட் டவள்போலே—
பிள்ளையனேன் சொற்குப் பரிவாகக்;

கொள்ளைகொளான் சத்திக் குமரா!தாட்—
கொய்மலர்தாஞ் சற்றெற் குதவாயோ;

தள்ளையனுன் பச்சைத் திருமேனிச்—
சையமனன் புத்ரிக் கொருகேள்வா;

வெள்ளையுபேந்த் ரற்குற் றுறவோனே—
வில்லுடையான் பட்டிப் பெருமாளே.

நாதநாமக்ரியை] 5 கதிபெற [ஆதி

தான தானன தாந்தத்த தானன
தான தானன தாந்தத்த தானன
தான தானன தாந்தத்த தானன தனதான

ஏது காரணம் யான்சற்று மோர்கிலன்
ஏழை யேனெனை ஈன்டுற் றவாவுடன்
ஈச! நீயழை ஆந்த்ரக்கு ணுதிச யமதேதான்—

ஏறு போல்நடை கான்டற்கு னேரெதிர்
வீறு சேவகர் தாஞ்சுற்ற மாயுற
ஈடி லாவகை நான்சொற்கள் பாடுதல் அறியாயோ;

காது கேள்தமிழ் வேண்டிக்கொ ளோ!பல
காலும் நானுனை ஆண்டிக்கு கா!எது
காலம் ஆள்வைகொல்! ஆண்டற்பு தாதிகள் புரியாயோ-

காரணு!என வேண்டிக்கொள் காரண
மோசொ லாய்!உமை கோன்பெற்ற காதல!
காயம் வாய்மன மூன்றுக்கும் நாயக! கதிதாராய்;

சாது பூஜித சேந்தப்பி ரான்!வடி
வேலும் நீள்விலும் ஏந்தப்பெ ருவுள
தாழும் வார்சடை வேந்தப்பி ரான்!உயர் கொடிசேவல்-

தாவு பாணிகொள் சாந்தப்பி ரான்!அயி
ராணி வானவர் கோன்புத்ரி மான்மகள்
தாவில் கானவர் கோன்புத்ரி மான்மகள் தழைதோகை;

பீது பாலுற ஏந்திக்கொ ளாசங்னி
நீடு லாவரும் ஏந்தற்பி ரான்!அவர்
மேவு மோரிரு பாங்குற்ற தோருரு வுடையோனே-

வேலை சூழ்கடல் மாந்தர்க்கெ லாமிக
வேலை யீதர வாய்ந்துற்ற பூமிநெய்
வேலி வேலுடை யான்நாட்டி மேவிய பெருமானே.

## ஹரிகாம்போதி] 6. திருநாமோச்சாரணம் செய்ய [ஜம்பை;

தானதன தாந்தத்த தானதன தாந்தத்த
தானதன தாந்தந்த தனதானந் தந்ததான

காமமறு சாந்தத்தர் கோபமறு வானசித்தர்
கானிலுறை காந்தத்தர் கனஞானங் கண்டுமோனம்-

காணவிழை கோன்சத்தி பாணிசடை யான்சித்ர
காசினியெ லாம்பெற்ற கருணேசன் கந்தவேளெம்

சேம(ம்) நினை வோன்செட்டி யாயபெரு மான்சிட்டர்
தேவர்தொழ வாஞ்சைச்சொல் முருகேசன்
செந்திலோன்மெய்த்-

தேவகுரு தான்சொற்ற காதைசெவி வாங்கிக்கொள்
தேவனென யான்செப்பி நிதமோதும் பண்புதாராய்;

காமமுதல் மூன்றுக்கும் நாடரிய தாஞ்சத்தி
காரணா!ம கேந்த்ரற்கு மருகோனென கண்டியூரா-

காதலிய ராஞ்சத்தி தாயிருவர் பாங்கர்க்கொள்
காவல'க ஜேந்த்ரற்கொ ரிளையோனென் தண்டபாணீ;

நேமநெறி வாய்ந்துற்ற யோகியர்கள் காண்டற்கும்
நேடரிய நோன்புற்ற பெருமானென் சிந்துவேலா-

நீளயில்கொள் வான்பட்டி வேலியரு காம்பட்டி
நீள்விலுடை யான்பட்டி தனில்வாழுந் தம்பிரானே

சௌராஷ்டிரம்] முருகவேள் பதிகம் [ஆதி

(கலிவிருத்தம்)

7

இலகு ஞாநியர் எண்ணந் துளேஉறை
தலக நாயக னான தயாபரன்
விலகுந் தீவினை *வில்லுடை யான்பட்டி*
உலக நாயகன் மைந்தனை ஓதுமே. (1)

8

நாலி லேவிழுங் கண்ணியர் புண்ணியர்
வாலி தாம்வகை வாழ வெறிசெய்நெய்
வேலி வேலுடை யான்பட்டி மேவிய
வேலி னானை விளம்புமின் மாந்தரே. (2)

9

நல்ல வர்க்கெலாம் நல்லவன், நண்ணரும்
பொல்ல வர்க்கெலாம் பொல்லவன், பொற்கையில்
வில்ல வன்விழை வில்லுடை யான்பட்டித்
தொல்ல வன்தனைத் தோத்திரஞ் செய்யுமே. (3)

10

நாட ருந்தவம் நண்ணிய வாழ்க்கையார்
தேட ருந்தெய்வத் தேசின் உருவினன்
வேட னாயவன் வேலுடை யான்பட்டி
ஆட கக்குன்றை ஆதரஞ் செய்ம்மினே. (4)

11

இரைந்தி ரைந்திசைத் தேந்துவார் தங்களைக்
கரைந்து காதலி னாற்கடைக் கண்செய
விரைந்து வந்தருள் வில்லுடை யான்பட்டிக
துரந்த ரற்குத் தொழும்புகள் செய்ம்மினே. (5)

12

முருக வேள்முறு நீர்வண்ண மொய்ம்புறர்
மருக வேள்மயி லூர்தி யுறுவரை
வெருவ வேசெயும் வில்லுடை யான்பட்டி
ஒருவ னைத்தினம் உள்குதி நெஞ்சமே. (6)

13

அகல்நெ டுங்கண்ணி அம்பிகை நந்தனன்
குகனெ னும்பெயர் கொண்ட குமரவேள்
மிகஅ றிந்தருள் வேலுடை யான்பட்டிப்
பகவ னைப்பணிந் தால்விடும் பாவமே (7)

14

ஒன்று கூறுவன் நெஞ்சே! உணர்ந்துகொள்!
இன்று தொட்டென் றும் முந்தி இருந்திடாய்!
வென்று சூரைக்கொல் வில்லுடை யானபட்டி
மன்று ளாடியை வாழ்த்தக் கடவையே (8)

15

பள்ள மின்றி யிருக்கலாம் நித்தமும்
வள்ளல் மாணிக்க வண்ணன் மகிழருள்
வெள்ள மாயவன் வேலுடை யான்பட்டி
உள்ள வன்தனை ஓதி உருகிலே. (9)

16

பணத்தைத் தேடிப் புதைத்துவை பாவிகாள்!
குணத்தைத் தேடிக் குமரனைக் கண்டுகொண்டு
விணத்தைச் சார்பொழில் வில்லுடை யான்பட்டி
மணத்தை நோக்கவும் வந்துவந் தார்மினே. (10)

17

போரில் வெல்லலாம் பொய்யின் விலகலாம்
சூரி னைத்தொலைத் தான்கழல் சொல்லியே
வேரி ருந்தருள் வேலுடை யான்பட்டி
ஆரி யன்றனை அண்டி அடைகிலே. (11)

18

பாலி னால்முழுக் காட்டல்கொள் பண்பினான்
நாலி ரண்டுரு வானவன் நங்கள்நெய்
வேலி வில்லுடை யான்பட்டி வேடனைப்
போலி யின்றிப் புனைந்துரை செய்ம்மினே. (12)

19

நல்ல காலம் நமக்குண்டு ஞாலத்தீர்!
அல்ல வற்றை அகற்றி அருள்கென
மெல்ல வேலுடை யான்பட்டி வேளிடம்
சொல்ல வல்லிரேற் சோகந் தொலையுமே. (13)

(வில்லுடையான்பட்டி முருகவேள் அருட்புகழ் முற்றும்)

# நெய்வேலி வில்லுடையான்பட்டி

# அருட்புகழ் - பொழிப்புரை

கல்வம்-கழுநீர் மலர், மராமம்-வெண்கடம்பு, பிச்சி பிச்சிப்பூ,
கூவிளம்-வில்வம், மௌவல் - முல்லை, குராமம்-குராமலர், கொட்டி-
நீர்க்கொட்டியென்னும் ஒருவகை நீர்ப்பூ, நீல்மலர்-நீலோற்பலப்பூ, கள்
அவிழ் - தேன்கமழும், பூஞ்செச்சை - வெட்சிப்பூ, கோடல்-காந்தள்
மலர், நெய்தலொடு-நெய்தல் என்னும் நீர்ப்பூவோடு, ஆரம்-செங்கடம்பு,
கைதை-தாழம்பூ, விளாம்-விளா இலை, கற்பதாருவின்-கற்பகதருவின்,
நொய்அலர்-மெல்லியபூ, கோங்கின்-கோங்கமரத்தின், பொன்ஆர்மலர்-
அழகிய பூ, கைரவம்-கைரவம் (செவ்வல்லி), ஆம்பல்-அல்லி, (வெள்
ளல்லி) முதலிய, தணீர் மலர்-நீர்ப்பூக்கள், கரவீரம் - அலரி ஆதிய,
பல்வகையாம் - பலதிறத்தனவான, புட்ப ஜாதிகள் - பூவகைகள்,
வௌவலொடு-தாமரைப்பூவோடு, ஏந்துற்ற-தாங்கியுள்ள, தோள்மிசை-
திருத்தோளின்மேல், பள்ளுவம்-வில்லை, ஏந்தி-தாங்கி, கைஆர்சரம்-
கையிற்பொருந்திய அம்பையும், உடையானே-உடையவனே! பல்லவ
வேந்துக்குள்-பல்லவ அரசர்களுள், மா - சிறந்த, கலை வல்லவனும்-
கலைகளில் வல்லமை பெற்றவனும், சித்ரகாடவ பல்லவன் - 'சித்திர
காடவ பல்லவன்' என்ற திருப்பெயரையுடைய பல்லவஅரசன், வேண
டிசசெய்-விரும்பிக் கட்டிய, கோயில்! - திருக்கோயிலையுடையவனே!
எனை ஆள்வாய்-என்னை ஆட்கொள்வாயாக!, செல்வம் உளான்-நிறைந்த
செல்வமுடையவன், பொற்குபேரன்-அழகிய குபேரன், நேர்-ஒப்பற்ற,
கல்வி எலாம் கற்றக-ல்விகளெல்லாம் கற்றறிந்த, ஊரர் - ஆரூராகிய
சுந்தரர் இவர்களை, சொல் - சொல்லப்படுகின்ற, தெய்வீகவாஞ்சை-
தெய்வீக அன்பு பொருந்திய, சிநேகிதர் எனவே - நண்பர்கள் என்று,
பேண-விரும்புகின்ற, செவ்விய - செம்மையான, காஞ்சிப்புராதனர்-
காஞ்சிபுரத்திலுள்ள பழையவர், பவ்விய - பணிவுள்ள, சாந்தத்து -
சாந்தியோடு (அமைதியோடு) கூடிய, உமாமகிழ்; உமாதேவியார் மகிழ்
கின்ற, திவ்விய-திவ்யமான, தாம்பத்ய வாழ்வினன்-தம்பதிவாழ்க்கை
வாழ்கின்றவன், முடிமேலே-திருமுடியின்மேல், வில்வம் உனார்-

விலை இலைகளைச் சூடிண்ணன் புகசி- எருக்கு தாநுகிபஆத்தி, வெள்ளில் எலாம்-விளா இலை இவற்றையெலாம், சுற்றையேணியில் – அடர்ந்த சடையின்மேல், வெள் இரவோன பகல்-வெளுத்த சந்திரனுக்கருகே சூடு ஞுறை-சூடிக்கொண்டுள்ள இறைவனை, மிகு – (சிறப்பால்) மிக்க, நூபவெல்கொடியான் – ரிஷபக்கொடியாகிய வெற்றிக்கொடியையுடையவனை, பசசை மேனிகொள் – பசுமையான திருமேனியையுடைய, தொல் கொடியான–பழைய, கொடிபோல வாளாகிய பார்வதியை, உடையவனுன சிவபிரானின், புத்ரனே–புதல்வனே! உயர்–(சிறப்பால்)உயர்ந்த, வில்லுடையானபட்டி–வில்லுடையானபட்டி எனனும் ஊரில், மேவிய– விருமபி வீற்றிருக்கின்ற, பெருமாளே–பெருமைககுரியவனே!

(என்னை ஆளவாய என்றபடி)

**கருத்துரை :**

சிவபிரான் குமாரனே! விலலுடையான் பட்டிப்பெருமாளே! பல வகைய பூககளணிநத தோளமீது விலலும அமபும ஏந்தியுளளவனே! சிதமகாடவ பலலவன கட்டிய திருககோயிலில இருப்பவனே! என்னை ஆட்கொளவாயாக.

## 2

ஆணவம ஓங்குறற – அகங்காரம மேமபட்டுளள, வாழ்வினில் – வாழக்கையில ஆதாவாம – அதறகுப்பறறுக்கோடாய் சிறகின்ற, தறப மாயையில்; காயத்திலும், மாயாவிகாரங்களிலும், ஆயிரமாம பற்றும்– ஆயிரககணக்கான பறறுதல்களும், ஆசையும – பேராசைகளும, அகலாத–நீஙகாமல், ஆழ்வுறுவேன்–மூழ்கி நிறபேன, கெட்ட நோய களில்–கெடுதலான நோயவகைகளில், மாழ்குறுவேன் – அழுகிப்போய் அழிவேன், பறறொடு–ஆசையோடு, ஆகமம், ஆரணம – சிவாகமம், வேதம் இவறறைறயெல்லாம, நான் கற்றிலேன் – அடியேன் கற்றுக் கொண்டேனில்லை, அகலிடமூடே–அகன்ற பூமியின்மேல், காண் அவ மாம்–காணப்படுகின்ற வீணுன, பித்தரோடு – பித்துபிடித்த புலையர்க ளோடு, உழல்–திரிகின்ற காரியனேன் – செயலகளையுடையவன், கற்பி லேன்; நல்ல கற்பொழுக்கஙகளில்லாதவன், உனகால்பணியேன் – உன் திருவடிகளைத் தொழுமாட்டேன், கற்றமூடரொடு – கல்வி கற்றும் அறி வில்லாத மூடஜனஙகளோடு, எது நாளும – என்றைக்கும், கால் தொடர்வேன்; (அவர் வழியையே) பின்பறறுவேன், பசசைமா மிசை – பச்சைக்குதிரையாகிய மயிலின் மீது, நீவரல் – நீ

திருவுலா வருந்தலைக், காணூடற்கு வரு — காணபதற்கென்று, ஒருகாலும் எனேன் — ஒருபோதும எண்ணமாட்டேன், பித்தனேன்-பித்துப்பிடித்தவனை, எனை – என்னை, இனிது ஆள்வாய—இனிய முறையில் ஆட்கொள்வாயாக, மாணை நவமாம – சிறந்த ஒன்பதாகிய, சொற்ற மாமணி-சொல்லப்பெருகின்ற பெரிய ரத்தினங்களைப, பூண அழகாம் – பூணடுகொணடுள்ள அழகுககு, பொற்பின் – அழகு செய்யும், மாரபக – திருமாரபகத்தையுடையவனே! மாயவனும - மாயையில்லாதவனும, பசசைமால் – பசுநிறமுடைய திருமாலுககும, திரு-இலக்குமிக்கும், மருகோனே – மருமகனே! மாதவ – மஹா தபஸ்விகளாகிய, சாந்தத்துயோகியா–மனசசாநதிபெறற யோகீசவரரகள், பாதகமாம்–பஞ்சமாபாதகம் எனப்படும, தப்பு இலரா – தவறுகள் இல்லாதவர்கள், அவா வாரகழல்பூணடு–அவரகளுடைய திருவடியைத் திருமுடிமேற்சூடி, அரசசனைகள–அரசசனை முதலிய வழிபாடுகளெல்லாம், புரிவார்தாம்–செய்பவரகளே, வேணமதலாம–வேணடியவற்றையெல்லாம, பெற்று வாழ்வுற–பெற்றுப் பேரின்ப வாழ்வையும் பெற, வீறுடன ஆய்ந்து–வீறுப்புடன் ஆராயசசி செயது, அற்புதாதிகள் - அறபுதச செயல்கள் முதலியவற்றை, வேலைமொடு; காலததுககொட்டியவாறு குறித்தநேரஙகளில், ஆஙகுசெய–அஙகுசசெயது காட்டுகின்ற, வேதியா தலைவோனே–அந்தணர் தலைவனே! மேதினி–(இந்தப்)பூமியானது, ஒஙகற்கு–மேலோஙகுவதற்கென்றே, மேவு–வாயததுள்ள, வெயவேலி-வெய வேலி என்ற நகரத்துக்கு ஒருபாலபாகமான, ஒருபககததில் (அமைநதிருககின்ற), நீள்–நீணட(பெரிய), முது–பழைய, வேலுடையானபட்டி–வேலுடையான்பட்டி என்னும தலததில் வாழ்வுறு–வாழ்ந்திருககின்ற, பெருமாளே – பெருமைக்குரியவனே! (என்)னை இனிது ஆள்வாய என்றபடி)

**கருத்துரை:—**

நவரதனமாலை மாரபனே! திருமால் மருகனே! அடியாரக்கு அடியாராயிருப்பவாக்கெல்லாம அருள்பவனே! உலகுபுகழ் வெயவேலியின ஒரு புறத்தே வேலுடையானபட்டியிலிருககும முருகவேளே! எவ்வகையிலும் உததமன் அலலாத எனனை இனிமையுற ஆட்கொள்வாயாக!

3

**பதவுரை:—**

கற்ற மாதவர்தாம–கல்வியில் வல்லமை பெற்ற மஹா தபஸ்விகள், சொற்ற–சொல்லிக்கொடுத்துள்ள தூநெறி போம்–தூயவழியிற் செல்

கின்ற, கற்பிலேன் அடியேன்-நல்லொழுக்கமில்லாத அடியேன், கடை நாயேன்-மிகவும கடைப்பட்ட நாயினேன், கற்றை வார்சடை-அடர்ந்த நீண்ட சடைகள், வாய்ந்து உற்ற- (தலையின்கண) பொருந்திய, வேல வனும-வேலாயுதனும், கர்த்தனே-தலைவனே, உனை வேணடுவது எது- உன்னிடம் நான் வேணடிக் கொள்ள வேண்டுவது என்ன உணடு? சுற்றமாய்-(எனக்கு) உறவாய், நனி - நன்றாக, சூழ்ந்துற்ற - வந்து பொருந்திய, மாதுணையாய்-சிறந்த துணையாகிய, சுத்தனே !-பரி சுத்தனே இவன் வேணடுவ - அடியேன் வேண்டிக்கொள்பவை, யாவும் - எல்லாம, சொற்றிடாமல் - (யான்) சொல்லாமலேயே, எலாம கற்று - அனைத்தையும் உணர்ந்து, நீ அறிவோன் - நீயே தெரிநது கொள்பவனுமிருக்க, துற்று-பொருந்தி வந்து, நாயடியேன்- நாயினும் கீழ்பட்ட அடியேன், சொலல் ஏதோ - உன்னிடம் வந்து சொல்லுவது எதுணடு ? (ஒன்றுமில்லை யென்றபடி) பெற்றம்-இடப வாகனத்தின்மேல், எறிடுவான்; எறித்திருவுலா வருவான். பிசசை- பிசசைக்கு, போய உழல்வான் -போயப் போய் ஊர்தோறும் திரிபவன், பித்தாபோல எ(ல்)லாம-பித்தப பிடித்தவர்களைப்போலெல்லாம, திரி வான்-திரிகின்றவன், மா பெததா தாம்-பெரிய பந்தபாசததுக்கு உட் பட்டவர்களெலலாம, அறியான்-அறிந்துகொள்ள முடியாதவன், புற்று அரா அணிவான-புற்றில வாழும பாமபை அணிந்துகொள்பவன் ஆன சிவபிரான, பெற்ற-பெற்றருளிய சேயவனும சிறியோனே - குழந்தை யாம சிறியவனே (சிறிய குழந்தையே;) பற்று அது ஆர்-(தன்னிடத்தில்) ஆசை பொருநதிய, சிவமாம சுததி-சிவமாகிய சத்தி, காசியில்-காசியில் வாழ்கினற, ஓம பத்ரகாளி-ஓம பதர காளி எனப்படும, நெடுஉகு கணி (நெடுஙகணி)-விசாலாட்சியமமையின் பாலா, குழந்தையே, பட்டை நீறு அணி - பட்டை பட்டையாகத திருநீறணிந்துள்ள, சாந்தத்தச-ாந்த மூாத்தியே! வேலுடையான்பட்டி வாழ் - வேலுடையான்பட்டி திருக் கோயிலில வாழ்கினற. குருவாம பெருமானே-குருமூர்த்தியாய் அருள் செய்யும் பெருமைக்குரியவனே ! (உன் திருவருள் என்னே ! என்றவாறு)

**கருத்துரை:—**

சிவகுமாரனே ! உமைபாலனே ! திருநீறணியும் வேலுடையான் பட்டிப் பெருமானே ! எனக்கு வேணடியவை அனைத்தையும் அறிபவன் நீ யிருகக எனககு இன்னின்ன வேணடும் என நான் விண்ணப்பிக்க வேணடுவது எதுணடு ? (ஒனறுமில்லை எனறபடி).

இப்பாடலில் வில்லுடையான்பட்டி முருகவேள் சடையுடைய ரென்பதும், இவ்வூரத் தேவி திருநாமம் விசாலாட்சி யென்பதும் குறிக்கப்பெற்றுள்ளது.

## 4

**பதவுரை :—**

பிள்ளையெலாம் – (ஆண், பெண்) குழந்தைகளையெல்லாம், பெற்றிட்டவள் போலே–பெற்ற தாயைப் போல, பிள்ளையனேன்–குழந்தையாகிய அடியேனுடைய, சொற்கு – சொல்லுக்கு, பரிவாக – அன்பாக (இருந்து என் உள்ளத்தை), கொள்ளைகொள்; கொள்ளை கொள்ளும், ஆண் சக்தி–ஆண் மகனும் சிவபிரானுடைய ஆண் சக்தியாக அவதாரம் செய்த, குமரா–குமாரவேளே ! தாள் கொய் அலர் தாம, (கொய் அலர் தாள் தாம)–பறிக்கப்பெறும் புட்பத்தைப்போல மலர்ந்த உன் திருவடியிணையை, சற்று–சிறிதேனும், எற்கு உதவாயோ – எனக்குத் தந்தருள மாட்டாயோ ! தன்னை அ(ன்)ஞன்–தாய்போன்றவன, பசைத் திருமேனி –பசிய திருமேனி கொண்ட, சையம் அஞன் – மலைபோன்றவன் ஆகிய திருமாலின், புத்ரிக்கு–மகளாகிய தெய்வநாயகிக்கு, ஒரு கேள்வா–ஒப்பற்ற கணவனே ! வெள்ளை – வெண்ணிற மேனி படைத்த அல்லது வெள்ளையுள்ளமுடைய, உபேந்த்ரற்கு; உபேந்திரனின அவதாரமான நமபிராஜனுக்கு, (அதாவது திருமாலுக்கு மாப்பிள்ளையென்னும்) உற்ற உறவோனே–நெருங்கிய உறவு பூண்டவனே ! வில்லுடையான் பட்டி–வில்லுடையான் பட்டி என்னும ஊரில் வீற்றிருக்கும், பெருமானே – பெருமைக்குரியவனே ! (கொஞ்சம திருவடி தந்தருளக என்றபடி)

**கருத்துரை :—**

திருமால் மகளிர்க்குத் தலைவனே ! நமபிராஜனின் மருமகனே ! வில்லுடையான் பட்டி முருகவேளே ! தாய்போல் என்னைப் பரிந்தாட்கொள்ளும் ஆண பிள்ளையே ! உன் திருவடியைத் தந்தருள்க !

இப்பாடலில் முருகவேள் ஆணுக்கே பிறந்தபிள்ளை, ஆண பிள்ளையென்பதும், திருமால் 'பசைமாமலை போல் மேனியன்' என்பதும், உபேந்திரன் வெள்ளை நிறமுடையவனென்பதும கூறப்பெற்றுள. ஸ்த்ரீ சம்பந்தமின்றிச் சிவபிரான் நெற்றிக்கணகளிலிருந்து வந்த தீப்பொறி

களாலுண்டான முருகவேள் ஆணுகவே உதித்த பிள்ளை, அவனொரு வனே ஆண்பிள்ளை மற்றையோரெல்லாம் பெண் பிள்ளைகள் என்ற விஷயம் இப்பாடலில் குறிக்கப் பெற்றுள்ளது

## 5

ஏது காரணம்—என்ன காரணமோ, யான் சற்றும் ஓர்கிலன்—எனக்கு ஒன்றும் புரியவில்லை, ஏழையேன் எனை—ஏழை எளியவனுகிய என்னை, ஈண்டு உற்று—இவ்விடத்திற்குப் பொருத்தமாக, அவாவுடன் - ஆசை யோடும். ஈச — ஈசனே ! நீ அழை—நீ இன்று அழைத்தருளிய. ஆந்த்ரக் குணுதிசயம் அது—அந்தரங்கமான அதிசயக்குணமானது (ஏ, தான்—அசை நிலைகள்) ஏறுபோல் நடைகாணடற்கு—ரிஷபம் போன்ற உன் நடையழகைத் தரிசிப்பதற்கு, உன் நேர எதிர் — உனக்கு நேரெதிரில், வீறு சேவகர் தாம — விளங்குகின்ற வீரதொண்டர்களெல்லாம், சுற்ற மாய உற — சுற்றுப்புறங்களிலெல்லாம சூழ்ந்து நிற்க, ஈடு இலா வகை; ஒப்பில்லா வகையில் நான சொற்கள் பாடுதல்—அடியேன் சொற்றமிழ் பாடுவதை, அறியாயோ—நீ அறிந்துகொள்ள மாட்டாயோ ! காதுகேள்—நீ காதிலே கேட்டுக்கொள்கின்ற தமிழ் வேண்டிக்கொலோ — தமிழ் விருப்பத்தாலோ! பலநாளும — பலசமயங்களிலும், நான் உனை—நாயேன் உன்னை, ஆண்டிக் குக — ஆண்டியாகிய குகப்பெருமானே ! ஏது காலம ஆளவைகொல — எந்தக்காலம ஆண்டுகொள்வாயோ, ஆண்டு—அங்ஙனம ஆட்கொண்டு, அற்புதங்கள — அற்புத விஷயங்கள் முதலிய வற்றை. புரியாயோ—செய்யமாட்டாயோ, காரண என — அனைத்துக் கும் காரணமானவனே என்று, வேண்டிக்கொள் காரணமோ — வேண்டிக் கொள்கின்ற காரணத்தினுலோ, சொலாய்—சொல்லியருளுக ! உமை கோன் பெற்ற காதல—உமாதேவியின் கணவனும் சிவபிரான் பெற்றரு ளிய புதல்வனே ! காயம், வாய், மனம் மூன்றுககும்; (என்) மனு, வாக், காயம் மூன்றினுக்கும, நாயக; தலைவனே! கதி தாராய்—பர கதியைத் தந்தருள்வாயாக! ஸாது பூஜித—நல்ல பெரியவர்களால் வழி படப் பெறுகின்ற, சேந்தப் பிரான்—சேந்த னென்னும பெயர் கொண்ட தலைவனே! வடிவேலும நீள்விலும — வடிவேலாயுதமும்; நீண்ட விற் படையும், ஏந்தபெரு உள! (கைகளில்) ஏந்தப்பெறறுள்ள, தாழும் வார சடை—தொங்குகின்ற நீண்ட சடைகளையுடைய, வேந்தப்பிரான்- அரசனுகிய தலைவனே, உயாகொடி சேவல்—உயர்ந்த சேவற்கொடி யானது. தாவு பாணிகொள்—தாவியமாந்துள்ள கையைக் கொண்ட, சாந்தப்பிரான்! அமைதியின் உருவமான தலைவனே! அயிராணி. வான

வர் கோன்-இந்திராணிக்கும், தேவர் தலைவனும் இந்திரனுக்கும், புத்ரி-மகளும, மான மகள-திருமாலின மகளும ஆகிய தெய்வயானையம்மை, தா இல்-குற்றமற்ற, கானவா கோன் புதரி - வேடா தலைவனும் நம்பி ராஜன் மகளாகிய வள்ளியம்மை இருவரும், தழை தோகைமீது-தழைத்த தோகை மயிலின் மேல், பால் உற-இரு பககஙகளிலும் பொருந்த, ஏந்திக கொளளா-ஏநதிக்கொணடு; ஈனி-ஈன்றுக நீடு உலா வரும-பெருமையுடன் திருவுலா வருகின்ற, எந்தப்பிரான்-சிறநத ஆணை மக ளுகிய தலைவனே ! அவா-அநத வள்ளி தெய்யவானை இருவரும் மேவுய-வீற்றிருக்கின்ற ஓா இரு பாகு உற்றது-ஒபபற்ற இரு பககஙகளைக் கொணடதான, ஒருரு உடையோனே-ஒரே உருவத்தைக் கொணட வனே! வேலை சூழ்கடல் (வேலைக் கடல்சூழ்) - அலைகள் நிறைநத கட லால் சூழபபட்டதும, மாநதாகளெலாம - உலக மக்களுககெல்லாம, மிகவேலைஈதா - மிகவும வேலைகள கொடுக்கும்பொருட்டு, வாய்ந்துற - ஏறபட்டுள்ளதுமான. பூமி செயவேலி - பூமிப்பரப்பைக் கொணட செய்வேலியை சோநத, வேலுடையான்பட்டி-வேலுடை யான்பட்டி என்னும திருத்தலத்தில், மேவிய-விருமபி வீற்றிருக்கின்ற, பெருமானே-பெருமைக்குரியவனே! (நற்கதியைத தந்தருள்க என்றபடி)

**கருத்துரை: -**

சேந்தனே! வேலும வில்லும ஏநதிய சடையபரே! சேவற்கொடி யாய்! வள்ளியும தேவானையும இருபுறமுற மயிலமீது உலா வருபவனே! அவாகளை எப்போதும அருகிலும வீற்றிருக்கக் கொணட ஒரே சிவா மூர்த்தமான மூர்த்தியே ! உலகில யாவாககும மேன மேலும வேலை தா வல்லதான பூமியைக கொணட செயவேலியைச சாாநத வேலுடை யான்பட்டிப் பெருமானே ! எனனை நீ இங்கு அழைத்ததன காரணம என்னவென்றறியேன் தமிழாசையாலோ! அல்லது நான் உனனை சதா அழைப்தாலோ! உமாபதி குமரனே ! மனோவாக்காய நாயகனே! உயர்ந்த கதியைத் தநதருள்வாயாக.

இப்பாடலில் முருகவேள் கறகிலை யொன்றிலேயே வள்ளி தெய் வானை இருவருருவமும அமைந்துளளதும, செயவேலி மிகச் சிறநத பொருளாதார அபிவிருத்தித் தொழிற்சாலையாக அமைந்துள்ள பெருமை யும் குறிக்கப்பெற்றுள்ளமை கவனிக்கற்பாலது.

6

பதவுரை :—

காமம் அறு சாந்தத்தா — காமவிகாரமில்லாத சாந்தமூர்த்திகள், கோபம அறு—கோபமற்ற, வான்சித்தர்—விசாலமான மனமுடையவர்கள், கானில் உறை — காடுகளில் வாழ்கின்ற, காந்தத்தா — விருப்பமுடைய வாகன், (இவாகளெல்லாம), கனஞானம் கண்டு—மகாஞானத்தை அறிந்து கொண்டு, மோனம் காண—மௌனநிலையை உணர்ந்துகொள்ள, விழை கோன்—விரும்பி வழிபடுகின்ற தலைவன், சத்திபாணி-வேலேந்துகையான் சடையான—சடைமுடியுடையான, சித்ர காசினிஎலாம்—அழகிய உலகங் களையெல்லாம, பெறற — பெற்றருளிய, கருணேசன் — கருணைமூர்த்தி, கந்தவேள்—கநதபிரான், எம சேமம் நினைவோன்—எஙகளுடைய க்ஷேமத் தையே கருதுபவன், செட்டி ஆய பெருமான் — வளைசசெட்டியாய்த் திருவிளையாடல் செய்த பிரான், சிட்டா—சிஷ்டாசாரமுடையவர்கள், தேவா—வானவர்களெல்லாம. தொழு—வழிபடுகின்ற, வாஞ்சைசசொல்—விரும்பததக்க இன்சொல்பேசுகின்ற, முருகேசன் — முருகவேள், செந்திலோன் — திருசசெந்தூரான், மெய்த்தேவகுருதான் — உண்மையே பேசும வியாழ பகவானுனவா, சொற்ற கதை—சூரர்தியர்களைப் பற்றிச சொன்ன கதைகளையும, செவி வாயகிக்கொள்—காதில் வாஙகிக்கொண்ட, தேவன்—தேவாதிதேவன். என—என்றெல்லாம. யான் செப்பி—நான் புகழ்ந்து. நிதம ஓதும—நிதயம (உன்னைத) துதிசெய்யும, பண்பு தாராய்—நற்பணபுகளைத தநதருள்க!. காமம முதல் மூனறுக்கும்—காமம், வெகுளி, மயக்கம் ஆகிய மூன்றுக்கும, எட்டரியதாம—கிட்டமுடியாததான, சுத்தி காரண; (யோக) சகதிக்குக் காரணமாயிருப்பவனே!,—மகா இந்த்ரற்கு—பெரிய தேவேந்திரனுக்கு, மருகோன் என- மருமகன் என்று சொல்லப் படுகின்ற, கண்டியூர்—திருக்கண்டியூரானே!. காதலியராம் (உன்னைக்) காதலித்தவாகளாம, சத்திதாம் இருவர்—சததியராம் (வள்ளி, தெய்வ யானையெனும) இருவரையும, பாஙகர்கொள்—(இரு) பக்கஙகளிலுங கொண்ட, காவல—காவலனே!, கஜேந்த்ரற்கு — கஜபதியாகிய விநாயக் கடவுளுக்கு, நூா — ஒப்பற்ற, இளையோனென்—தம்பியெனப்படுகின்ற, தண்டபாணீ—தணடாயுதபாணியே!. நேமநெறி—நியமநிட்டை நெறிகள் வழியாக, வாய்ந்துற்ற—அமையப்பெற்ற, யோகியர்கள்—யோகீஸ்வரர் களுஙகூடக, காணடற்கும்—கண்டு கொள்ளுதறகும், நேடரிய—விரும்பு தற்கும் அரிய, நோன்புற்ற—தவம் வாய்ந்த, பெருமானென்—பெரியவன் என்று சொல்லப்பெறும், சிந்துவேலா — வைடூரியத்தாலான வேலாயு

தனே!, நீள் அயில் சொன்னவான்பட்டி; — நீண்ட வேலைச் சொண்டவ னுடைய பட்டி (வேலுடையான்பட்டி)யும், வேலி அருகாம்பட்டி - செய்வேலிக்கு அருகிலுள்ள பட்டியுமான, நீள் விலுடையான்பட்டி தனில் - நீண்ட வில்லுடையான்பட்டியில், வாழும் - வீற்றிருக்கும், தம்பிரானே - தலைவனே! (ஓதும் பணபு தந்தருள்க என்றபடி)

**கருத்துரை :**

முக்குற்றங்களால் அறியப்படாதவனே! இந்திரன மருகனே! வள்ளி, தெய்வயானை கேளவனே! கணபதி தம்பியே! யோகியா களும காணரிய ரத்ன வேலனே! செய்வேலிக கருகாணதும், வேலுடையான்பட்டி எனப்படுவதுமான வில்லுடையான் பட்டியில வாழும தம்பிரானே! முனிவாகள் பணியும தலைவன; வேலாயுதபாணி உலகைப்படைத்த கருணையாளன், கநதன், எமமை நினைந்து காப்பவன், செட்டி, தேவாதொழுதலைவன், முருகன், செநதூரன், வியாழகுரு சொன்ன சூரபுராணங்களைச செவிசாயதது கேட்டவன் என்றெல்லாம சொல்லிததினமும தோத்திரம் செய்யும் நறபணபைத் தந்தருளுக

## 7

**பொழிப்புரை :**

(மக்களே!) விளஙகுகின்ற ஞானிகளின் மன எணணஙகளில் வாழ் பவனும் குளத்திற் பிறந்த தலைவனும, தயாநிதியும் தீவினைகளெல்லாம விலகக்கூடிய வில்லுடையான் பட்டியில் மேவும் உலக நாயகனாகிய விசவநாதனின் மகனுமாகிய முருகவேளை ஓதுஙகள்.

குறிப்பு ; வில்லுடையான்பட்டிச சிவபிரான் 'விசுவநாதா' உலகநாயக னெனக்குறிக்கப்பட்டாா.

## 8

**பொழிப்புரை :**

மானிடர்களே! (தன்) காலடியில் வீழ்ந்து வணஙகும் மேதைகளை யும், புண்யாத்மாக்களையும் சிறந்த வகையில் வாழும்படி அவாகட்கு நல்வழிசெய்கின்ற செய்வேலியைச சார்ந்த வேலுடையான்பட்டியில் வீற்றிருக்கும் வேலவனைப்புகழுஙகள்.

## 9

### பொழிப்புரை :

(உலகீரே!) நல்லவர்களுக்கெல்லாம் நல்லவனும், அடைதற்கரியவனும், பொல்லாதவர்களுக்கெல்லாம் பொல்லாதவனும், அழகியகையில் வில்லேந்தியவனும், விரும்பி வீற்றிருக்கும் வேலுடையான்பட்டிப் பழைய பெருமானுமான முருகவேளைத் துதிசெய்யுங்கள்.

## 10

### பொழிப்புரை :

(மனிதர்களே!) அடைய முடியாத தவம் செய்த நல்வாழ்வினர்களாலுங்கூட தேடியடைய முடியாத தெய்வீகத்தேஜஸ் பொருந்திய திருவுருவமுடையவனும், வேடவேடமெடுத்தவனும், வேலுடையான் பட்டியில் வாழும் செம்பொன்மலை போலவனுமான கந்தவேளிடம் அன்பு செலுத்துங்கள்.

## 11

### பொழிப்புரை :

(மாந்தர்களே!) மிகப்பலத்த குரலோடு புகழ்ந்து பாடுபவர்களுக்கு அன்பினேற் கரைந்து ஆசையால் கடைக்கண்ணருள் செய்ய வேகமாக வந்தருளும் வேலுடையான்பட்டித் தலைவனாகிய செவ்வேளுக்குத்திருத் தொண்டு செய்யுங்கள்.

## 12

### பொழிப்புரை .

மனமே! முருகவேளும், கடல்போல் நிறம் படைத்த பலசாலியான திருமாலின் மருகவேளும், மயில்வாகனனும், வேடர்களையெல்லாம் அருகும்படிசெய்யும் வேலுடையான்பட்டி மேவும் ஒப்பற்றவனுமான கந்தக்கடவுளைத் தினந்தோறும் நினைப்பாயாக

## 13

### பொழிப்புரை :

விசாலாட்சியம்மையின் திருக்குமாரனும், 'குகன' என்ற பெயரைக் கொண்ட குமரவேளும், மிகவும் மதிர்ந்துகொண்டு அருள் செய்யும் வேலுடையான் பட்டிப் பகவானுமான வேலனைப் பணிந்தால் பாவங்கள் விட்டுப்போகும்.

## 14

**பொழிப்புரை :**

மனமே! ஒன்று சொல்கின்றேன்; உணர்ந்துகொள்வாயாக! இன்று முதல் என்றென்றும் புகழ்ந்து கொண்டே இருப்பாயாக. (யாரையெனில்), சூரனை வெற்றிகொண்டு அவனைக்கொன்றருளிய வில்லுடையான் பட்டிக்கோயிலாகிய சபையில் நடனமாடுகின்ற குகனை வாழ்த்தக் கடமைப்பட்டிருக்கின்றாய் நீ.

## 15

**பொழிப்புரை :**

தினந்தோறும், வளர்பிறையானும், மணிபோல் சிறந்தவனுமான சிவபிரான் மகிழ்கின்ற அருள் வெள்ளமயமானவனும் வேலுடையான் பட்டியில் உள்ளவனுமான குமரனை ஓதி ஓதி உருகினால் (உலகில்) இகழ்ச்சியின்றி இருக்கலாம்.

## 16

**பொழிப்புரை :**

பணத்தைத் தேடித் தேடிப் புதைத்து வைக்கின்ற பாவிகளே! நல்ல குணங்களைத் தேடி வைத்துக்கொண்டு குமரவேளும், [illegible] பளவும் சோலைகள் சூழ்ந்த வில்லுடையான் பட்டியில் வாழும் நறுமணமாகிய முருகனுமான கடவுளைக் கண்களால் பார்த்துத் தரிசிக்கவும் வந்து வந்து நிறையச் சேருங்கள்.

## 17

**பொழிப்புரை :**

சூரபத்மாவைத் தொலைத்தவனும், வேர்முதல் உச்சி வரை அருள்மயமாயிருக்கின்ற வேலுடையான்பட்டியில் வாழும் ஆரியசரேஷ்டருமான முருகனின் திருவடிப்புகழ் சொல்லி அவனை நெருங்கி அடைக்கலமடைந்தால் போரில் வெற்றி பெறலாம்; பொய்யினின்று விலகியிருக்கலாம்.

## 18

**பொழிப்புரை: —**

(ஜகத்தீரே !) பாலபிடேகம் செய்யப்பெறுகின்ற நற்பண்பாளனும், அட்டமூர்த்தங்கள் கொண்டவனும், நமது ஜெயவேலி வில்லுடையான் பட்டி செவ்வேளுமானவனைப் பொய்ம்மை யில்லாமல் உண்மையாகப் பாக்கள் புனைந்து புகழ்பாடுங்கள்.

## 19

**பொழிப்புரை : —**

உலகத்தவர்களே ! நமக்கு நல்லகாலம் உண்டு. நன்மை அல்லாதனவற்றை யெல்லாம் அகற்றியருள வேண்டும் என்று மெதுவாக வேலுடையான்பட்டி செவ்வேளிடம் சொல்ல வல்லீர்களானால் துன்பமெல்லாம் தொலைந்துபோகும்.

வில்லுடையான்பட்டி அருட்புகழ்

(குறிப்புரை, பொழிப்புரை யாதிய முற்றும்)

# ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் தோத்திர மஞ்சரி

(தொகுத்து வெளியிட்டோர்; எஸ். வி. சுப்ரமண்யம் சகோதரர்கள்)

திருவருணையில் அவதரித்துச், சந்தப்பாக்கள் பாடி அறியா இன்பம் பெற்றவர் அருணகிரிநாத சுவாமிகள். அன்னார் மீது பல பெரியோர்கள் தனித் தோத்திரங்கள் பல பாடியிருக்கின்றனர். மேலும் பற்பல நூலகளிலும் அவரைப் பற்றிக் குறிப்பிட்டுப் போந்துள்ளனர். இயன்றவரை சேகரித்த அத்தோத்திரங்களும், குறிப்புக்களுமே இத் 'தோத்திர மஞ்சரி' ஆகும். அருணகிரியார் படமும் அதில் இணைக்கப்பட்டுளது.

56 பக்கங்கள் கொண்டது. விலை 75 காசு.

(புத்தக அஞ்சற் செலவு 8 காசு)

# அருட்புகழ்

[ஆசிரியர் : அருட்கவி-சேதுராமனூர்]

ஆசிரியர் 1954-இல நவராத்திரி தினங்களில் (1-10-54 முதல 8-10-54 வரை) யாத்திரை செய்தபோது நாகப்பட்டினம், திருச்செங்காட்டங்குடி, திருக்கண்ணபுரம், திருப்புகலூர், பஞ்சட் கொல்லை, சிக்கல, கீழ்வேளூர், எட்டிகுடி, திருவாய்மூர், திருவாரூர், சுவாமிமலை ஆகிய தலங்களில கோயில கொண்டுள்ள விநாயகர், முருகர், சிவபிரான், உமையம்மை, சட்டைநாதர், திருமால், இராமர், இலக்குமி ஆகிய மூர்த்தங்களின் மீது தோத்திரங்களாகப் பலவகைப் பா இனங்களிற் பாடிய 256 பாடலகள் குறிப்புரைகளுடன் இப்புத்தகத்தில் அடங்கியுள்ளன.

காஞ்சி காமகோடி பீடம்-சங்கராசார்ய ஸ்வாமிகள் அருளிய ஸ்ரீ முகத்துடன் கூடியது.

112 பக்கங்கள் கொண்டது. விலை 75 காசு.

(புத்தக அஞ்சற் செலவு 14 காசு)

**இரு நூல்கள் ஒரே காலத்திற் பத்துப் பிரதிகள் வாங்கினுல் ஒரு பிரதி விலையின்றிக் கொடுக்கப்படும்.**

கிடைக்குமிடம் :

**S. V. சுப்ரமண்யம்**

**141, லிங்க செட்டித் தெரு, சென்னை-1.**

# ரங்கநாடு

# ஸ்ரீ நடராஜர் இரட்டைமணி மாலை



திராவிடக்கவிமணி ஸ்ரீ வே. முத்துசாமி அய்யர், M. A., L. T.
பாலகவி மு. கோதண்டராமன்
இவர்கள் இயற்றியது.



ஸ்ரீ மஹாபாரதம் பிரஸ்
கும்பகோணம்
1957

# சாற்றுக் கவிகள்

---

முருகவேள் பன்னிரு திருமுறையின் உரையாசிரியர்
சென்னை உயர்திரு தணிகை மணி இராவ் பகதூர்
**வ. சு. செங்கல்வராய பிள்ளை, M. A. அவர்கள் இயற்றியன.**

**இரட்டை** மணிமாலை கோத்தற்கு வேண்டும் எழிற்கவிஞர்
இரட்டையர் என்றே திராவிடப் பாமணி என்றபுகழ்
திரட்டிய நம்பியும் அன்னார் குமாரரும் செம்மணிபொன்
புரட்டிடு காவிரி சூழ்ரங்க நாத புரந்தனிலே.

**கூத்தப்** பிரானது கோலத்தைக் கண்டு குதூகலித்தே
ஏத்தற் குரிய எழில்மாலை ஒன்றை இனிதமைத்துச்
சாத்திக் களிப்புறு கின்றார் அவர்தம் சமயபத்திச்
சோத்தத்தை எம்பெரு மான்மகிழ்ந் தேற்பன் சுவையுடனே.

(சோத்தம் – தோத்திரம், துதி.)

# முகவுரை

---

இந்நூல் எமமூர்ச் சிவாலயததில் 6—12—56-ல எங்களால் நூதனமாகப பிரதிஷ்டை செயயபபட்ட ஸ்ரீ நடராஜப் பெருமான் திருவடிப் புகழாக எங்களால் பாடப்பட்டது.

இதில் வெண்பாவும், கலிததுறையும் ஆக அந்தாதி வரிசையில் 20 பாக்கள் வருகின்றன. இவறறில் வெணபாககள திராவிடக் கவிமணியும் கலிததுறை பாலகவியுமபாடியவை.

எஙகள ஊருக்கு ரங்கநாதபுரம் என்ற வழக்கப பெயருடன கஜாரண்யம் எனற பெயருமஇருததலால ஊரப்பெயர் கஜாரண்யம, கரிவனம, ஆனைவனம, வேழவனம், அரஙகபுரம், அரங்கநாதபுரம், ரங்கபபதி எனறு பாக்களில விரவி இருக்கினறன.

இநநூலைக் கையெழுததுப் பிரதியிலேயே பார்வையிட்டுச் சாற்றுக கவிகளை உதவிய செனனை இராவ பகதூர் தணிகை மணி அவாகளுககு எம நன்றி என்றும உரியது.

இங்ஙனம்
**திராவிடக் கவிமணி**
**வே. முத்துசாமி அய்யர்**
**பாலகவி மு. கோ. ராமன்**

ரங்கநாதபுரம்
திருக்காடடுப்பளளி P. O.

உ

திருச்சிற்றம்பலம்

# ரங்கநாதபுரம்

# ஸ்ரீ நடராஜர் இரட்டைமணி மாலை

## காப்பு

### (உள்ளூர் வலம்புரி விநாயகர் துதி)

தேசம் விளங்கத் திருவரங்க நாதபுர
ஈசர் நடேசர் இசைஏத்திப்—பேசும்
இரட்டைமணி மாலைக்(கு)இன்(பு) ஈக வலப்பால்
புரட்டு புழைக் கையான்முன் போந்து.

## நூல்

### வெண்பா

சீரார் அரங்கபுரத் தெய்வச் சிவாலயத்தெம்
நாரார் நடராசர் நண்ணுசெயல்—பாரேற
மேயது துன்முகிஇம் மேன்மையால் இங்கணியா
ஆயது நன்முகி இவ் ஆண்டு. 1

### கலித்துறை

ஆண்டவ னே!அயன் மாலறி யாவணம் அண்டமுட்ட
நீண்டவ னே!அரா அம்புலி கங்கை நிமிர்சடையிற்
பூண்டவ னே!பொன்னி சூழும் அரங்க புரத்தெழிலார்
தாண்டவ னே!சரண் நின்சரண் நாயனைத் தாங்குகவே. 2

### வெண்பா

குகவேளை ஞான குருவாக முன்னாள்
தகவே உகந்த தலைவன்—மிக வேண்ட
எம்மூர் அரங்கபுரத்(து) இன்ப நடம்புரியும்
பெம்மான் அருட்டிறமே பேசு. 3

## கலித்துறை

பேசுநா ளெல்லாம் பிறந்தநா ளென்பர் பெரியர்;உனைத்
தேசுலாம் தெய்வ உருவே! நடம்பயில் சின்மயனே!
மூசுவண் டார்பொழில் சூழுங் கஜாரண்ய முன்னவனே!
ஆசு முதல்நாற் கவியுனைப் பாடற் கருள்புரியே. 4

## வெண்பா

புரிகுழ லாரொடு பொன்மண்ணில் ஆசை
புரிகுதல் வீண்;முப் புரத்தை—எரிகொளுவும்
ஈசன் கரிவனத்(து) எய்தும்ஆ னந்தநட
ராசன் பதம்பரமா நாட்டு. 5

## கலித்துறை

நாட்டுப் பலவளம் நாளும் மலிரங்க நாதபுரம்
காட்டும் புகழ்ச்செங் கணன்மாடக் கோயிலின் கண்ணமர்ந்தே
ஆட்டம் பயிலும் அணிநட ராச! அரியதமிழ்ப்
பாட்டுப் பகர்ந்துன் பதம்பெறச் செய்வாய் பரம்பொருளே! 6

## வெண்பா

பொருளிதுஎன்(று) உன்எழிலார் பொன்னுருவைச் சுட்டி
மருளொதுமில் வாதவூர் வள்ளல் — அருளியும்
அம்மா! அரங்கபுரத்(து) ஆடும் நடத்தரசை
இம்மா நிலம்உணரா தென்? 7

## கலித்துறை

என்னுட் பரந்துள மும்மல மாயை இரிந்தொழிய
மின்னிப் பொலிகின்ற செஞ்சடா பாரம் விரிந்தசைய
உன்னற் கரிய எடுத்தபொற் பாதம் உவந்தருள்வாய்;
பொன்னித் துறைரங்க நாத புரத்தொளிர் புண்ணியனே. 8

## வெண்பா

புண்ணுறுக நெஞ்சகமே! பொன்வேணி வீசி;மண்
விண்ணதிர ஆடும் விமலன்தாள்—எண்ணியே;
மண்ணுறுக மற்றையரின் மாண்பெல்லாம் வேழவனத்(து)
அண்ணல்நட ராசனரு ளால். 9

## கலித்துறை

ஆலடிக் கிழன்று நால்வர்க்கு ஞானம் அருளியவா !
காலடிக் கிழம் முயலகற் செற்ற கருணையனே !
மாலடிப் பட்டு மயங்கா வணம்செய்; மருங்குபொன்னி
சேலடித் தோடும் கரிவனத் தாடுமெய்ச் சீர்த்தியனே. 10

## வெண்பா

அனேகனென ஏகனென் ஆறுய் குபேரன்
சினேகனும் ஆறுய் சிவமார்—விநோத
அரங்க புரம்வந்தின்(று) ஆடல்போல் நெஞ்சத்(து)
அரங்கிலும் ஆடி அருள். 11

## கலித்துறை

அருணங் திருச்சடை ஆரும் பரமா! அகிலமெலாம்
கருணை மலியக் கரிவனத் தேநடங் காண்பவனே!
மருணங் தியமனப் பேயனைச் சேயனை வாழவைக்கும்
த்ருணம் இதுவே; தையைபுரி தாய்போற் றகசினைங்தே. 12

## வெண்பா

ஐங்தலைக்கண் இன்பநடம் ஆடுபவன் ஆனைவனம்
வங்துலகம் ஈடேறும் மாட்சியால்—சங்தம்
தனக்கேதும் ஒப்பில்லான் தாண்டவப் பொற்றுள்
மனக்கேதம் மாற்றும் மருங்து. 13

## கலித்துறை

மருங்தே எனினும்யான் வேண்டேன்நின் றுளன்றி வாழ்வுமுற்ற
இருங்தேன் பவநோய்க்(கு) இடமா;இவ் ஏழையை ஏன்றருள்வாய்
பொருங்தார் புரமெரி தேவா! அரங்க புரத்துநடம்
அருங்தா ரணிமிசை ஆடுவாய் அன்பர்க்(கு) அணிகலனே. 14

## வெண்பா

கலன்அணிங்து நல்லாடை கட்டி உணவின்
நலனுகரும் பேதையே நாளைக்(கு)—அலமங்தே
ஆவிஉறையும் போதுகதி ஆவதுனக்(கு) ஆனைவனத்
தேவுநட ராசனென்றே தேர். 15

### கலித்துறை

தேர்பரி யானைகா லாட்படை வேந்தும் சிவபரன்றாட்
சேர்வரி யாரெனிற் சேர்வர் துயர்எனத் தேர்தி நெஞ்சே
வரு செல்வங் கொழிகயா ரண்யத்(து) எழிற்றளியில்
கூரருள் பாலிக்கும் வண்ணம் வணங்குநம் கூத்தனையே. 16

### வெண்பா

அனையாகி அப்பனாய் அத்தனும் ஆகி
அனைய உறவனைத்தும் ஆனாய்—இனியதுணை
தூய கரிவனத்துன் தூக்கியபொற் றாளிருக்க
மாயவினை செய்வதென் மற்று. 17

### கலித்துறை

மற்றடந் தோள்தச கண்டனை வாட்டிப்பின் மாண்பருளும்
கற்றையஞ் செஞ்சடைக் கைலாயத் தேவைக் கரிவனத்தே
உற்றுத் திருநடம் ஆடும் ஒருவனை ஓங்குபதம்
மற்றெப் பொழுதும் மறவாது மாநிலம் வாழ்த்துகவே. 18

### வெண்பா

வாழிய சோழ வளநாடு நாளுளும்
வாழிய சைவம் வளர்தளிகள்—வாழி
அரங்க புரத்துநடம் ஆடுகின்ற அண்ணல்
திரங்கொள் அடிச்சீர் செழித்து. 19

### கலித்துறை

செழியன் விரும்பிடக் கால்மாறி ஆடும் சிவச்சுடரே
பழியஞ் சியபர! வாழி அரங்கப் பதியுகந்தோய்!
அழிய இலாதுல(கு) உய்யற்(கு) அகங்குழைந்(து) அஞ்சலெனும்
செழிய நடத்தருள் வாழி வழிவழி சீருறவே. 20



இத்தேவஸ்தான நித்திய சுதந்திர ஆதீனமாகிய திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர வாதீனத்து 24-வது பரமாச்சாரியராய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ ஷண்முக தேசிக ஞானசம்பந்த மகா சன்னிதானம் அவர்கள் இவ்வாதீன ஆலயங்களில் எல்லாம் செய்துவரும் முறைமையை யொட்டி இவ்வாலயத்தில் முக்கியமாக முதலில் செய்யவேண்டிய திருப்பணிகள் செய்தும் இருப்பதோடு இன்னும் செய்யவேண்டிய திருப்பணிகளை செய்தும் வருகின்றார்கள். நித்திய நைமித்திக உபகரணமாகிய நந்தனவன முதலிய பலவும் பயன்பெறச்செய்துவருவதோடு தமிழறிஞர்கட்கும் சைவாபிமானிகட்கும் பெரும்பயன் விளையும்படி இவ்வாலயத்தில் கற்றல் கேள்விகளிற் சிறந்த அறிஞர்களைக்கொண்டு அடிக்கடியும் திருவிழாக் காலங்களிலும் உபந்நியாசம் நிகழ்த்தும்படி செய்தும் வருகின்றார்கள். இப்பெருமானது அருட்டன்மையை யாவருமுணர்ந்து வழிபட்டு உய்யவேண்டுமென்ற பெருநோக்கத்தோடு இத்தல மான்மியம் முதலியன அச்சியற்றி வழங்கிவருவது தெரிந்த விஷயம். இத்தலப் பெருமையை தெற்றென ஓதியும் கேட்டும் அறிந்துகொள்வதற்கு ஏதுவாக சமயாச்சாரியார்களாகிய நால்வர்கள் இத்தலத்தைபபற்றியருளிய தேவார திருவாசகங்களோடு அருணகிரிநாதர் அருளிச்செய்த திருப்புகழ்ப பதிகங்களையும் சேர்தது சிறு புத்தகமாய் அச்சியற்றி மககளுககு இலவசமாக வழங்கவும் வேண்டுமென்று திருவுளங்கொண்டபடி அச்சியற்றப்பெற்றிருக்கிறது.





உ

சிவமயம்.

# திருவையாறு

என்னும்

திவ்ய ஸ்தலத்தைப்பற்றிய

# தேவாரத் திருப்பதிகங்கள்.

## திருஞானசம்பந்த சுவாமிகள்.

பண் — தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

கலையார் மதியோ டரநீரும்
நிலையார் சடையா ரிடமாகும்
மலையா ரமுமா மணிசந்தோ
டலையார் புனல்சே ருமையாறே. ௧

மதியொன் றியகொன் றைவடத்தன்
மதியொன் றவுதைத் தவர்வாழ்வு
மதியின் னொடுசேர் கொடிமாடம்
மதியம் பயில்கின் றவையாறே. ௨

கொக்கின் னிறகின் னொடுவன்னி
புக்க சடையார்க் கிடமாகும்
திக்கின் னிசைதே வர்வணங்கும்
அக்கின் னரையா ரதையாறே. ௩

சிறைகொண் டபுரம் மவைசிந்தக்
கறைகொண் டவர்கா தல்செய்கோயில்
மறைகொண் டநல்வா னவர்தம்மில்
அறையும் மொலிசே ருமையாறே. ௪

உமையா ளொருபா கமதாகச்
சமைவா ரவர்சார் விடமாகும்
அமையா ருடல்சோர் தரமுத்தம்
அமையா வருமந் தணையாறே.

தலையின் றொடைமா லையணிந்து
கலைகொண் டதொர்கை யினர்சேர்வாம்
நிலைகொண் டமனத் தவர்நித்தம்
மலர்கொண் டுவணங் குமையாறே. ௬

வரமொன் றியமா மலரோன்றன்
சிரமொன் றையறுத் தவர்சேர்வாம்
வரைநின் றிழிவார் தருபொன்னி
அரவங் கொடுசே ருமையாறே. ௭

வரையொன் றதெடுத் தவரக்கன்
சிரமங் கநெரித் தவர்சேர்வாம்
விரையின் மலர்மே தகுபொன்னித்
திரைதன் னொடுசே ருமையாறே. ௮

சங்கக் கயனு மறியாமைப்
பொங்குஞ் சுடரா னவர்கோயில்
கொங்கிற் பொலியும் புனல்கொண்டு
அங்கிக் கெதிர்காட் டுமையாறே. ௯

துவரா டையர்தோ லுடையார்கள்
கவர்வாய் மொழிகா தல்செய்யாதே
தவரா சர்கடா மரையானோ
டவர்தா மணையந் தணையாறே. ௰

கலையார் கலிக்கா ழியர்மன்னன்
நலமார் தருஞா னசம்பந்தன்
அலையார் புனல்சூ ழுமையாற்றைச்
சொலுமா லைவல்லார் துயர்வீடே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிராகம். பண் - வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பணிந்தவ ரருவினை பற்றறுத் தருள்செயத்
துணிந்தவன் றோலொடு நூற்றுதை மார்பினில்
பிணித்தவ னரவொடு பேரெழி லாமைகொண்
டணிந்தவன் வளநக ரந்தணை யாறே.

சீர்த்திமிக் கவனகர் கிளரொளி யுடனடப்
பார்த்தவன் பனிமதி படர்சடை வைத்துப்
போர்த்தவன் கரியுரி புலியத ளரவரை
ஆர்த்தவன் வளநக ரந்தணை யாறே. உ

வரிந்தவெஞ் சிலைபிடித் தவுணர்தம் வளநகர்
எரிந்தற வெய்தவ னெழிறிகழ் மலர்மேல்
இருந்தவன் சிரமது விமையவர் குறைகொள
அரிந்தவன் வளநக ரந்தணை யாறே. ௩

வாய்ந்தவல் லவுணர்தம் வளநக ரெரியிடை
மாய்ந்தற வெய்தவன் வளர்பிறை விரிபுனல்
தோய்ந்தெழு சடையினன் றொன்மறை யாறங்கம்
ஆய்ந்தவன் வளநக ரந்தணை யாறே. ௪

வானமர் மதிபுல்கு சடையிடை யரவொடு
தேனமர் கொன்றையன் றிகழ்தரு மார்பினன்
மானன மென்விழி மங்கையொர் பாகமும்
ஆனவன் வளநக ரந்தணை யாறே. ௫

முன்பனை முனிவரோ டமரர்க ளடிதொழும்
இன்பனை யிணையில விறைவனை யெழிறிகழ்
என்பொனை யேதமில் வேதியர் தாந்தொழும்
அன்பன வளநக ரந்தணை யாறே. ௬

வன்றிற லவுணர்தம் வளநக ரெரியிடை
வெந்தற வெய்தவன் விளங்கிய மார்பினில்
பந்தமர் மெல்விரல் பாகம தாகிதன்
அந்தமில் வளநக ரந்தணை யாறே. ௭

விடைத்தவல் லரக்கனல் வெற்பினை யெடுத்தலும்
அடித்தலத் தாலிறை யூன்றிமற் றவனது
முடித்தலை தோளவை நெரிதர முறைமுறை
அடர்த்தவன் வளநக ரந்தணை யாறே. ௮

விண்ணவர் தம்மொடு வெங்கதி ரோனல்
எண்ணிலி தேவர்க ளிந்திரன் வழிபடக்
கண்ணனும் பிரமனுங் காண்பரி தாகிய
அண்ணறன் வளநக ரந்தணை யாறே. ௯

மருளுடை மனத்துவன் சமணர்கண் மாசறு
இருளுடை யிணைத்துவர்ப் போர்வையி னார்களும்
தெருளுடை மனத்தவர் தேறுமின் றிண்ணமா
அருளுடை யடிகட மந்தணை யாறே. ய

நலமலி ஞானசம் பந்தன தின்றமிழ்
அலைமலி புனன்மல்கு மந்தணை யாற்றினைக்
கலைமலி தமிழிவை கற்றுவல் லார்மிக
நலமலி புகழ்மிகு நன்மையர் தாமே. கக

திருச்சிற்றம்பலம்.

---

பண் - மேகராகக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
யறிவழிந்திட் டைம்மேலுந்தி
அலமந்த போதாக வஞ்சேலென்
றருள்செய்வா னமருங்கோயில்
வலம்வந்த மடவார்க ணடமாட
முழவதிர மழையென்றஞ்சிச்
சிலமந்தி யலமந்து மரமேறி
முகில்பார்க்குந் திருவையாறே. க

விடலேறு படநாக மரைக்கசைத்து
வெற்பரையன் பாவையோடும்
அடலேறொன் றதுவேறி யஞ்சொலீர்
பலியென்னு மடிகள்கோயில்
கடலேறித் திரைமோதிக் காவிரியி
னுடன்வந்து கங்குல்வைகித்
திடலேறிச் சுரிசங்கஞ் செழுமுத்தங்
கீன்றலைக்குந் திருவையாறே. உ

கங்காளர் கயிலாய மலையாளர்
கானப்பே ராளர்மங்கை
பங்காளர் திரிசூலப் படையாளர்
விடையாளர் பயிலுங்கோயில்

கொங்காளப் பொழினுழைந்து கூர்வாயா
லிறகுலர்த்திக் கூதனீங்கிச்
செங்கானல் வெண்குருகு பைங்கான
லிரைதேருந் திருவையாறே. ௩

ஊன்பாயு முடைதலைகொண் டூரூரின்
பலிக்குழல்வா ருமையாள்பங்கர்
தான்பாயும் விடையேறுஞ் சங்கரனார்
தழலுருவர் தங்குங்கோயில்
மான்பாய வயலருகே மரமேறி
மந்திபாய் மடுக்கடோறுந்
தேன்பாய மீன்பாயச் செழுங்கமல
மொட்டலருந் திருவையாறே. ௪

நீரோடு கூவிளமு நிலாமதியும்
வெள்ளெருக்கு நிறைந்தகொன்றைத்
தாரோடு தண்கரந்தை சடைக்கணிந்த
தத்துவனார் தங்குங்கோயில்
காரோடி விசும்பளந்து கடிநாறும்
பொழிலணைந்த கமழ்தார்வீதித்
தேரோடு மரங்கேறிச் சேயிழையார்
நடம்பயிலுந் திருவையாறே. ௫

வேந்தாகி விண்ணவர்க்கு மண்ணவர்க்கு
நெறிகாட்டும் விகிர்தனாகிப்
பூந்தாம நறுங்கொன்றை சடைக்கணிந்த
புண்ணியனார் நண்ணுங்கோயில்
காந்தார மிசையமைத்துக் காரிகையார்
பண்பாடக் கவினார்வீதித்
தேந்தாமென் றரங்கேறிச் சேயிழையார்
நடமாடுந் திருவையாறே. ௬

நின்றுலா நெடுவிசும்பி னெருக்கிவரு
புரமூன்று நீள்வாயம்பு
சென்றுலாம் படிதொட்ட சிலையாளி
மலையாளி சேருங்கோயில்
குன்றெலாங் குயில்கூவக் கொழும்பிரச
மலர்பாய்ந்து வாசமல்கு
தென்றலா ரடிவருடச் செழுங்கரும்பு
கண்வளருந் திருவையாறே. ௭

அஞ்சாதே கயிலாய மலையெடுத்த
வரக்கர்கோன் றலைகள்பத்தும்
மஞ்சாடு தோணெரிய வடர்த்தவனுக்
கருள்புரிந்த மைந்தர்கோயில்
இஞ்சாய விளந்தெங்கின் பழம்வீழ
விளமேதி யிரிந்தங்கோடிச்
செஞ்சாலிக் கதிருழக்கிச் செழுங்கமல
வயல்படியுந் திருவையாறே. அ

மேலோடி விசும்பணவி வியனிலத்தை
மிகவகழ்ந்து மிக்குநாடும்
மாலோடு நான்முகனு மறியாத
வகைநின்றான் மன்னுங்கோயில்
கோலோடக் கோல்வளையார் கூத்தாடக்
குவிமுலையார் முகத்தினின்று
சேலோடச் சிலையாடச் சேயிழையார்
நடமாடுந் திருவையாறே. ௯

குண்டாடுங் குற்றுடுக்கைச் சமணரொடு
சாக்கியருங் குணமொன்றில்லா
மிண்டாடு மிண்டருரை கேளாதே
யாளாமின் மேவித்தொண்டீர்
எண்டோளர் முக்கண்ண ரெம்மீச
ரிறைவரினி தமருங்கோயில்
செண்டாடு புனற்பொன்னிச் செழுமணிகள்
வந்தலைக்குந் திருவையாறே. ௰

அன்னமலி பொழில்புடைசூ ழையாற்றெம்
பெருமானை யந்தண்காழி
மன்னியசீர் மறைநாவன் வளர்ஞான
சம்பந்தன் மருவுபாடல்
இன்னிசையா லிவைபத்து மிசையுங்கா
லீசனடி யேத்துவார்கள்
தன்னிசையோ டமருலகிற் றவநெறிசென்
றெய்துவார் தாழாதன்றே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

## பண் - இந்தளம்.

### திருச்சிற்றம்பலம்.

கோடல் கோங்கங் குளிர்கூவிள மாலை குலாயசீர்
ஓடு கங்கை யொளிவெண் பிறைசூடு மொருவனார்
பாடல் வீணை முழவங் குழன்மொந்தை பண்ணாகவே
ஆடு மாறுவல் லானுமை யாளுடை யையனே. க

தன்மை யாரு மறிவாரில்லை தாம்பிற ரெள்கவே
பின்னு முன்னுஞ்சில பேய்க்க ணஞ்சூழத் திரிதர்வர்
துன்ன வாடை யுடுப்பர் சுடலைப்பொடிப் பூசுவர்
அன்ன மாலுந்துறை யானுமை யாளுடை யையனே. உ

கூறு பெண்ணுடை கோவண முண்பதும் வெண்டலை
மாறி லாருங்கொள் வாரிலை மார்பி லணிகலம்
ஏறு மேறித்திரி வரிமை யோர்தொழு தேத்தவே
ஆறு நான்குஞ்சொன் னானுமை யாளுடை யையனே. ங

பண்ணி னல்லமொழி யார்பவ ளத்துவர் வாயினார்
எண்ணி னல்லகுணத் தாரிணை வேல்வென்ற கண்ணினார்
வண்ணம் பாடிவலி பாடித்தம் வாய்மொழி பாடவே
அண்ணல் கேட்டுகந் தானுமை யாளுடை யையனே. ச

வேன லானை வெருவவுரி போர்த்துமை யஞ்சவே
வானை யூடறுக் கும்மதி சூடிய மைந்தனார்
தேனெய் பாறயிர் தெங்கிள நீர்கரும் பின்றெளி
ஆனஞ் சாடுமுடி யானுமை யாளுடை யையனே. ரு

எங்கு மாகி நின்றானு மியல்பறி யப்படா
மங்கை பாகங்கொண் டானு மதிசூடு மைந்தனும்
பங்க மில்பதி னெட்டொடு நான்குக் குணர்வுமாய்
அங்க மாறுஞ்சொன் னானுமை யாளுடை யையனே. சா

ஓதி யாருமறி வாரில்லை யோதி யுலகெலாம்
சோதி யாய்நிறைந் தான்சுடர்ச் சோதியுட் சோதியான்
வேதி யாகிவிண் ணாகிமண் ணோடெரி காற்றுமாய்
ஆதி யாகிநின் றானுமை யாளுடை யையனே. எ

குரவ நாண்மலர் கொண்டடி யார்வழி பாடுசெய்
விரவி நீறணி வார்சில தொண்டர் வியப்பவே
பரவி நாடொறும் பாடநம் பாவம் பறைதலால்
அரவ மார்த்துகந் தானுமை யாளுடை யையனே. அ

உரைசெய் தொல்வழி செய்தறி யாவிலங் கைக்குமன்
வரைசெய் தோளடர்த் தும்மதி சூடிய மைந்தனூர்
கரைசெய் காவிரி யின்வட பாலது காதலான்
அரைசெய் மேகலை யானுமை யாறுடை யையனே. ௯

மாலுஞ் சோதி மலரானு மறிகிலா வாய்மையான்
காலங் காம்பு வயிரங் கடிகையன் பொற்கழல்
கோல மாய்க்கொழுந் தீன்று பவளந் திரண்டதோர்
ஆல நீழலு ளானுமை யாறுடை யையனே. ௰

கையி லுண்டுழல் வாருங் கமழ்துவ ராடையான்
மெய்யைப் போர்த்துழல் வாரு முரைப்பன மெய்யல
மைகொள் கண்டத்தெண் டோண்முக்க ணான்கழல் வாழ்த்தவே
ஐயந் தேர்ந்தளிப் பானுமை யாறுடை யையனே. ௧௧

பலிதி ரிந்துழல் பண்டங்கன் மேயவை யாற்றினைக்
கலிக டந்தகை யான்கடற் காழியர் காவலன்
ஒலிகொள் சம்பந்த னொண்டமிழ் பத்தும்வல் லார்கள்போய்
மலிகொள் விண்ணிடை மன்னிய சீர்பெறு வார்களே. ௧௨

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிராகம். பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

திருத்திகழ் மலைச்சிறுமி யோடுமிகு தேசர்
உருத்திகழ் எழிற்கயிலை வெற்பிலுறை தற்கே
விருப்புடைய வற்புத ரிருக்குமிட மேரார்
மருத்திகழ் பொழிற்குலவு வண்டிருவை யாறே. ௧

கந்தமர வுந்துபுகை யுந்தலில் விளக்கேர்
இந்திர னுணர்ந்துபணி யெந்தையிட மெங்கும்
சந்தமலி யுந்தரு மிடைந்தபொழில் சார
வந்தவளி நந்தணவு வண்டிருவை யாறே. ௨

கட்டுவட மெட்டுமுறு வட்டமுழ வத்தில்
கொட்டுகர மிட்டவொலி தட்டும்வகை நந்திக்
கிட்டமிக நட்டமவை யிட்டவ ரிடஞ்சீர்
வட்டமதி லுட்டிகழும் வண்டிருவை யாறே. ௩

நண்ணியொர் வடத்தினிழ னால்வர்முனி வர்க்கன்
றெண்ணிலி மறைப்பொருள் விரித்தவ னிடஞ்சீர்த்
தண்ணின்மலி சந்தகிலொ டுந்திவரு பொன்னி
மண்ணின்மிசை வந்தணவு வண்டிருவை யாறே. ௪

வென்றிமிகு தாரகன தாருயிர் மடங்கக்
கன்றிவரு கோபமிகு காளிகத மோவ
நின்றுநட மாடியிட நீடுமலர் மேலால்
மன்றன்மலி யும்பொழில்கொள் வண்டிருவை யாறே. ௫

பூதமொடு பேய்கள்பல பாடநட மாடிப்
பாதமுதல் பையரவு கொண்டணி பெறுத்திக்
கோதைய ரிடும்பலி கொளும்பர னிடம்பூ
மாதவி மணங்கமழும் வண்டிருவை யாறே. ௬

துன்னுகுழன் மங்கையுமை நங்கைசுளி வெய்தப்
பின்னொரு தவஞ்செய்துழல் பிஞ்ஞகனு மங்கே
என்னசதி யென்றுரைசெ யங்கண னிடஞ்சீர்
மன்னுகொடை யாளர்பயில் வண்டிருவை யாறே. ௭

இரக்கமில் குணத்தொடுல கெங்குநலி வெம்போர்
அரக்கன்முடி யத்தலை புயத்தொடு மடங்கத்
துரக்கவிர லிற்சிறிது வைத்தவ னிடஞ்சீர்
வரக்கருணை யாளர்பயில் வண்டிருவை யாறே. ௮

பருத்துருவ தாகிவிண் ணடைந்தவனொர் பன்றிப்
பெருத்துருவ தாயுல கிடந்தவனு மென்றும்
கருத்துரு வொணாவகை நிமிர்ந்தவ னிடங்கார்
வருத்துவகை தீர்கொள்பொழில் வண்டிருவை யாறே. ௯

பாக்கியம தொன்றுமில் சமண்பதகர் புத்தர்
சாக்கியர்க ளென்றுடல் பொதிந்துதிரி வார்தம்
நோக்கரிய தத்துவ னிடம்படியின் மேலால்
மாக்கமுற நீடுபொழில் வண்டிருவை யாறே. ௰

வாசமலி யும்பொழில்கொள் வண்டிருவை யாற்றுள்
ஈசனை யெழிற்புகலி மன்னவன்மெய்ஞ் ஞானப்
பூசுர னுரைத்ததமிழ் பத்துமிவை வல்லார்
நேசமலி பத்தரவர் நின்மல னடிக்கே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசு சுவாமிகள்.

பண் — காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவா ரவர்பின் புகுவேன்
யாதுஞ் சுவடு படாம லையா றடைகின்ற போது
காதன் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். க

போழிளங் கண்ணியி னானைப் பூந்துகி லாளொடும் பாடி
வாழியம் போற்றியென் றேத்தி வட்டமிட் டாடா வருவேன்
ஆழி வலவனின் றேத்து மையா றடைகின்ற போது
கோழி பெடையொடுங் கூடிக் குளிர்ந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். உ

எரிப்பிறைக் கண்ணியி னானை யேந்திழை யாளொடும் பாடி
முரித்த இலயங்க ளிட்டு முகமலர்ந் தாடா வருவேன்
அரித்தொ ழுகும்வெள் ளருவி யையா றடைகின்ற போது
வரிக்குயில் பேடையொ டாடி வைகி வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். ௩

பிறையிளங் கண்ணியி னானைப் பெய்வளை யாளொடும் பாடித்
துறையிளம் பன்மலர் தூவித் தோளைக் குளிரத் தொழுவேன்
அறையிளம் பூங்குயி லாலு மையா றடைகின்ற போது
சிறையிளம் பேடையொ டாடிச் சேவல் வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். ௪

ஏடு மதிக்கண்ணி யானை யேந்திழை யாளொடும் பாடிக்
காடொடு நாடு மலையுங் கைதொழு தாடா வருவேன்
ஆட லமர்ந்துறை கின்ற வையா றடைகின்ற போது
பேடை மயிலொடுங் கூடிப் பிணைந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். ௫

தண்மதிக் கண்ணியி னானைத் தையனல் லாளொடும் பாடி
உண்மெலி சிந்தைய னாகி யுணரா வுருகா வருவேன்
அண்ண லமர்ந்துறை கின்ற வையா றடைகின்ற போது
வண்ணப் பகன்றிலொ டாடி வைகி வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். ௬

கடிமதிக் கண்ணியி னானைக் காரிகை யாளொடும் பாடி
வடிவொடு வண்ண மிரண்டும் வாய்வேண் டுவசொல்லி வாழ்வேன்
அடியிணை யார்க்குங் கழலா னையா றடைகின்ற போது
இடிகுர லன்னதோ ரேன மிசைந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். எ

விரும்பு மதிக்கண்ணி யானை மெல்லிய லாளொடும் பாடிப்
பெரும்புலர் காலை யெழுந்து பெறுமலர் கொய்யா வருவேன்
அருங்கலம் பொன்மணி யுந்து மையா றடைகின்ற போது
கருங்கலை பேடையொ டாடிக் கலந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். அ

முற்பிறைக் கண்ணியி னானை மொய்குழ லாளொடும் பாடிப்
பற்றிக் கயிறறுக் கில்லேன் பாடியு மாடா வருவேன்
அற்றருள் பெற்றுநின் றாரோ டையா றடைகின்ற போது
நற்றுணைப் பேடையொ டாடி நாரை வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். கூ

திங்கள் மதிக்கண்ணி யானைத் தேமொழி யாளொடும் பாடி
எங்கரு ணல்குங்கொ லெந்தை யெனக்கினி யென்று வருவேன்
அங்கிள மங்கைய ராடு மையா றடைகின்ற போது
பைங்கிளி பேடையொ டாடிப் பறந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். ய

வளர்மதிக் கண்ணியி னானை வார்குழ லாளொடும் பாடிக்
களவு படாததோர் காலங் காண்பான் கடைக்கணிக் கின்றேன்
அளவு படாததோ ரன்போ டையா றடைகின்ற போது
இளமண நாகு தழுவி யேறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன். கக

திருச்சிற்றம்பலம்.

---

பண் — பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

விடகிலே னடிநாயேன் வேண்டியக்கா லியாதொன்றும்
இடகிலே னமணர்கட மறவுரைகேட் டலமந்தேன்
தொடர்கின்றே னுன்னுடைய தூமலர்ச்சே வடிகாண்பான்
அடைகின்றே னையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. க

செம்பவளத் திருவுருவர் திகழ்சோதி குழைக்காதர்
கொம்பமருங் கொடிமருங்குற கோல்வளையா ளொருபாகர்
வம்பவிழு மலர்க்கொன்றை வளர்சடைமேல் வைத்துகந்த
அம்பவள வையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. ௨

நணியானை சேயானை நம்பானை செம்பொன்னின்
துணியானை தோலானை சுண்ணவெண் ணீற்றானை
மணியானை வானவர்க்கு மருந்தாகிப் பிணிதீர்க்கும்
அணியானை யையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. ௩

ஊழித்தீ யாய்நின்று யுள்குவா ருள்ளத்தாய்
வாழித்தீ யாய்நின்றாய் வாழ்த்துவார் வாயானை
பாழித்தீ யாய்நின்றாய் படர்சடைமேற் பணிமதியம்
ஆழித்தீ யையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. ௪

சடையானை சடையிடையே தவழுந்தண் மதியானை
விடையானை விடையேறிப் புரமெரித்த வித்தகனை
உடையானை யுடைதலைகொண் டூருருண் பலிக்குழலும்
அடையானை யையாறர்க காளாய்நா னுய்ந்தேனே. ௫

நீரானை தீயானை நெதியானை கதியானை
ஊரானை யுலகானை யுடலானை யுயிரானை
பேரானை பிறைசூடி பிணிதீர்க்கும் பெருமானென்
றூராத வையாறர்க காளாய்நா னுய்ந்தேனே. ௬

கண்ணானாய் மணியானாய் கருத்தானா யருத்தானாய்
எண்ணானா யெழுத்தானா யெழுத்தினுக்கோ ரியல்பானாய்
விண்ணானாய் விண்ணிடையே புரமெரித்த வேதியனை
அண்ணானை வையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. ௭

மின்னா யுருவானாய் வேதத்தின் பொருளானாய்
பொன்னாய் மணியானாய் பொருகடல்வாய் முத்தானாய்
நின்னா ரிருவர்க்குங் காண்பரிய நிமிர்சோதி
அன்னானை யையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. ௮

முத்திசையும் புனறபொன்னி மொய்பவளங் கொழித்துந்தப்
பத்தர்பலர் நீர்மூழ்கிப் பலகாலும் பணிந்தேத்த
எத்திசையும் வானவர்க ளெம்பெருமா னெனவிறைஞ்சும்
அத்திசையா மையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. ௯

கருவரைசூழ் கடலிலங்கைக் கோமானைக் கருத்தழியத்
திருவிரலா லூதகரணஞ் செய்துகந்த சிவமூர்த்தி
பெருவரைசூழ் வையகத்தார் பேர்நந்தி யென்றேத்தும்
அருவரைசூ ழையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. ௰

திருச்சிற்றம்பலம்.

---

## திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

கங்கையைச் சடையுள்வைத்தார் கதிர்பொறி யரவும்வைத்தார்
திங்களைத் திகழவைத்தார் திசைதிசை தொழவும்வைதார்
மங்கையைப் பாகம்வைத்தார் மான்மறி மழுவும்வைத்தார்
அங்கையு ளனலும்வைத்தா ரையனை யாறனாரே. க

பொடிதனைப் பூசவைத்தார் பொங்குவெண் ணூலும்வைத்தார்
கடியதோர் நாகம்வைத்தார் காலனைக் காலவைத்தார்
வடிவுடை மங்கைதன்னை மார்பிலோர் பாகம்வைத்தார்
அடியிணை தொழவும்வைத்தா ரையனை யாறனாரே. உ

உடைதரு கீளும்வைத்தா ருலகங்க ளனைத்தும்வைத்தார்
படைதரு மழுவும்வைததார் பாய்புலித் தோலும்வைத்தார்
விடைதரு கொடியும்வைத்தார் வெண்புரி நூலும்வைத்தார்
அடைதர வருளும்வைததா ரையனை யாறனாரே. ௩

தொண்டர்க டொழவும்வைத்தார் தூமதி சடையில்வைத்தார்
இண்டையைத் திகழவைத்தா ரெமக்கென்று மின்பம்வைத்தார்
வண்டுசேர் குழலினாளை மருவியோர் பாகம்வைத்தார்
அண்டவா னவர்களேத்து மையனை யாறனாரே. ௪

வானவர் வணங்கவைத்தார் வல்வினை மாயவைத்தார்
கானிடை நடமும்வைத்தார் காமனைக் கனலாவைத்தார்
ஆனிடை யைந்தும்வைத்தா ராட்டுவார்க் கருளும்வைத்தார்
ஆனையி னுரிவைவைத்தா ரையனை யாறனாரே. ௫

சங்கணி குழையும்வைத்தார் சாம்பர்மெய்ப் பூசவைத்தார்
வெங்கதி ரெரியவைத்தார் விரிபொழி லனைத்தும்வைத்தார்
கங்குலும் பகலும்வைத்தார் கடுவினை களையவைத்தார்
அங்கமே தோதவைத்தா ரையனை யாறனாரே. ௬

பத்தர்கட் கருளும்வைத்தார் பாய்விடை யேறவைத்தார்
சித்தத்தை யொன்றவைத்தார் சிவமதே நினையவைத்தார்
முத்தியை முற்றவைத்தார் முறைமுறை நெறிகள்வைத்தார்
அத்தியி னுரிவைவைத்தா ரையனை யாறனாரே. ௭

ஏறுகந் தேறவைத்தா ரிடைமரு திடம்வைத்தார்
நாறுபூங் கொன்றைவைத்தார் நாகமு மரையில்வைத்தார்
கூறுமை யாகவைத்தார் கொல்புலித் தோலும்வைத்தார்
ஆறுமோர் சடையில்வைத்தா ரையனை யாறனாரே. ௮

பூதங்கள் பலவும்வைத்தார் பொங்குவெண் ணீறும்வைத்தார்
கீதங்கள் பாடவைத்தார் கின்னரந் தன்னைவைத்தார்
பாதங்கள் பரவவைத்தார் பத்தர்கள் பணியவைத்தார்
ஆதியு மந்தம்வைத்தா ரையனை யாறனாரே. ௯

இரப்பவர்க் கீயவைத்தா ரீபவர்க் கருளும்வைத்தார்
கரப்பவர் தங்கட்கெல்லாங் கடுநர கங்கள்வைத்தார்
பரப்புநீர்க் கங்கைதன்னைப் படர்சடைப் பாகம்வைத்தார்
அரக்கனுக் கருளும்வைத்தா ரையனை யாறனாரே. ௰

திருச்சிற்றம்பலம்.

---

## திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

குண்டனாய்ச் சமணரோடே கூடிநான் கொண்டமாலைத்
துண்டனே சுடர்கொள்சோதீ தூநெறி யாகிநின்ற
அண்டனே யமரரேறே திருவையா றமர்ந்ததேனே
தொண்டனேன் றொழுதுன்பாதஞ் சொல்லிநான் றிரிகின்றேனே. ௧

பீலிகை யிடுக்கிநாளும் பெரியதோர் தவமென்றெண்ணி
வாலிய தறிகள்போல மதியிலார் பட்டதென்னே
வாலியார் வணங்கியேத்துந் திருவையா றமர்ந்ததேனோ
டாலியா வெழுந்தநெஞ்ச மழகிதா வெழுந்தவாறே. ௨

தட்டிடு சமணரோடே தருக்கிநான் றவமென்றெண்ணி
ஒட்டிடு மனத்தினீரே யும்மையான் செய்வதென்னே
மொட்டிடு கமலப்பொய்கைத் திருவையா றமர்ந்ததேனோ
டொட்டிடு முள்ளத்தீரே யும்மைநா னுகந்திட்டேனே. ௩

பாசிப்பன் மாசுமெய்யர் பலமிலாச் சமணரோடு
தேசத்தா லிருந்தநெஞ்சை நீக்குமா றறியமாட்டேன்
தேசத்தார் பரவியேத்துந் திருவையா றமர்ந்ததேனை
வாசத்தால் வணங்கவல்லார் வல்வினை மாயுமன்றே. ௪

கடுப்பொடி யட்டிமெய்யிற் கருதியோர் தவமென்றெண்ணி
வடுக்களோ டிசைந்தநெஞ்சே மதியிலி பட்டதென்னே
மடுக்களில் வாளைபாயுந் திருவையா றமர்ந்ததேனை
அடுத்துநின் றுன்னுநெஞ்சே யருந்தவஞ் செய்தவாறே. ௫

துறவியென் றவமதோரேன் சொல்லிய செலவுசெய்து
உறவினா லமணரோடு முணர்விலே னுணர்வொன்றின்றி
நறவமார் பொழில்கள்சூழ்ந்த திருவையா றமர்ந்ததேனை
மறவிலா நெஞ்சமேநன் மதியுனக் கடைந்தவாறே. ௬

பல்லுரைச் சமணரோடே பலபல காலமெல்லாம்
சொல்லிய செலவுசெய்தேன் சோர்வனா னினைந்தபோது
மல்லிகை மலருஞ்சோலைத் திருவையா றமர்ந்ததேனை
எல்லியும் பகலுமெல்லா நினைந்தபோ தினியவாறே. ௭

மண்ணுளார் விண்ணுளாரும் வணங்குவார் பாவம்போக
எண்ணிலாச் சமணரோடே யிசைந்தனை யேழைநெஞ்சே
தெண்ணிலா வெறிக்குஞ்சென்னித் திருவையா றமர்ந்ததேனைக்
கண்ணினாற் காணப்பெற்றுக் கருதிற்றே முடிந்தவாறே. ௮

குருந்தம தொசித்தமாலுங் குலமலர் மேவினானும்
திருந்துநற் றிருவடியுந் திருமுடி காணமாட்டார்
அருந்தவ முனிவரேத்துந் திருவையா றமர்ந்ததேனைப்
பொருந்திநின் றுன்னுநெஞ்சே பொய்வினை மாயுமன்றே. ௯

அறிவிலா வரக்கனோடி யருவரை யெடுக்கலுற்று
முறுகினான் முறுகக்கண்டு மூதறி வாளனோக்கி
நிறுவினான் சிறுவிரலா னெரிந்துபோய் நிலத்தில்வீழ
அறிவினா லருள்கள்செய்தான் றிருவையா றமர்ந்ததேனே. ௰

திருச்சிற்றம்பலம்.

## திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

தானலா துலகமில்லை சகமலா தடிமையில்லை
கானலா தாடலில்லை கருதுவார் தங்களுக்கு
வானலா தருளுமில்லை வார்குழன் மங்கையோடும்
ஆனலா தூர்வதில்லை யையனை யாறனார்க்கே. ௧

ஆலலா லிருக்கையில்லை யருந்தவ முனிவர்க்கன்று
நூலலா னெறிவதில்லை நுண்பொரு ளாய்ந்துகொண்டு
மாலுநான் முகனுங்கூடி மலரடி வணங்கவேலை
ஆலலா லமுதமில்லை யையனை யாறனார்க்கே. ௨

நரிபுரி சுடலைதன்னி னடமலா னவிற்றலில்லை
சுரிபுரி குழலியோடுந் துணையலா லிருக்கையில்லை
தெரிபுரி சிந்தையார்க்குத் தெளிவலா லருளுமில்லை
அரிபுரி மலர்கொண்டேத்து மையனை யாறனார்க்கே. ௩

தொண்டலாற் றுணையுமில்லை தோலலா துடையுமில்லை
கண்டலா தருளுமில்லை கலந்தபின் பிரிவதில்லை
பண்டைநான் மறைகள்காணாப் பரிசின னென்றென்றெண்ணி
அண்டவா னவர்களேத்து மையனை யாறனார்க்கே. ௪

எரியலா லுருவமில்லை யேறலா லேறலில்லை
கரியலாற் போர்வையில்லை காண்டகு சோதியார்க்குப்
பிரிவிலா வமரர்கூடிப் பெருந்தகைப் பிரானென்றேத்தும்
அரியலாற் றேவியில்லை யையனை யாறனார்க்கே. ௫

என்பலாற் கலனுமில்லை யெருதலா லூர்வதில்லை
புன்புலா னறுகாட்டிற் பொடியலாற் சாந்துமில்லை
துன்பிலாத் தொண்டர்கூடித் தொழுதழு தாடிப்பாடும்
அன்பலாற் பொருளுமில்லை யையனை யாறனார்க்கே. ௬

கீளலா லுடையுமில்லை கிளர்பொறி யரவம்பைம்பூண்
தோளலாற் றுணையுமில்லை தொத்தலர் கின்றவேனில்
வேளலாற் காயப்பட்ட வீரரு மில்லைமீளா
ஆளலாற் கைம்மாறில்லை யையனை யாறனார்க்கே. ௭

இழிவித்த வாறிட்ட நோய்வினை காட்டி யிடர்ப்படுத்துக்
கழிவித்த வாகட்ட நோய்வினை தீர்ப்பான் கலந்தருளி
அழிவித்த வாறடி யேனையை யாற னடிமைக்களே
தொழுவித்த வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே.

இடைவித்த வாறிட்ட நோய்வினை காட்டி யிடர்ப்படுத்து
உடைவித்த வாறுற்ற நோய்வினை தீர்ப்பா னுகந்தருளி
அடைவித்த வாறடி யேனையை யாற னடிமைக்களே
தொடர்வித்த வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே.

படக்கின வாபட நின்றுபன் னாளும் படக்கினநோய்
அடக்கின வாறது வன்றியுந் தீவினை பாவமெல்லாம்
அடக்கின வாறடி யேனையை யாற னடிமைக்களே
தொடக்கின வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே.

மறப்பித்த வாவல்லை நோய்வினை காட்டி மறப்பித்தநோய்
துறப்பித்த வாதுக்க நோய்வினை தீர்ப்பா னுகந்தருளி
இறப்பித்த வாறடி யேனையை யாற னடிமைக்களே
சிறப்பித்த வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே.

துயக்கின வாதுக்க நோய்வினை காட்டித் துயக்கினநோய்
இயக்கின வாறிட்ட நோய்வினை தீர்ப்பா னிசைந்தருளி
அயக்கின வாறடி யேனையை யாற னடிமைக்களே
மயக்கின வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே.

கறுத்துமிட் டார்கண்டங் கங்கை சடைமேற் கரந்தருளி
இறுத்துமிட் டாரிலங் கைக்கிறை தன்னை யிருபதுதோள்
அறுத்துமிட் டாரடி யேனையை யாற னடிமைக்களே
பொறுத்துமிட் டார்தொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே. ௰

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சிந்திப் பரியன சிந்திப் பவர்க்குச் சிறந்துசெந்தேன்
முந்திப் பொழிவன முத்தி கொடுப்பன மொய்த்திருண்டு
பந்தித்து நின்ற பழவினை தீர்ப்பன பாம்புசுற்றி
அந்திப் பிறையணிந் தாடுமை யாற னடித்தலமே.

இழித்தன வேழேழ் பிறப்பு மறுத்தன வென்மனத்தே
பொழித்தன பேரெழிற் கூற்றை யுதைத்தன போற்றவர்க்காய்க்
கிழித்தன தக்கன் கிளரொளி வேள்வியைக் கீழ்முன்சென்
றழித்தன வாறங்க மானவை யாற னடித்தலமே. ௨

மணிநிற மொப்பன பொன்னிற மன்னின மின்னியல்வாய்
சணிநிற மன்ன வயிலைப் பொருப்பன சாதல்செய்யத்
துணிவன சீலத்த பாசத் தொடர்ந்துயி டாததொண்டர்க்
கணியன சேயன தேவர்க்கை யாற னடித்தலமே. ௩

இருடரு துன்பப் படல மறைப்பமெய்ஞ் ஞானமென்னும்
பொருடரு கண்ணிழந் துண்பொரு ளறியப் புசலிபுந்த
குருடருந் தம்மைப் பரவக் கொடுநர கக்குழிநின்
றருடரு கைகொடுத் தேற்றுவை யாற னடித்தலமே. ௪

எழுவா யிறுவா யிலாதன வெங்கட் பிணிதவிர்த்து
வழுவா மருத்துவ மாவன மாநர கக்குழிவாய்
விழுவா ரவர்தம்மை வீழ்ப்பன மீட்பன மிக்கவன்போ
டழுவார்க் கமுதங்கள் காண்கவை யாற னடித்தலமே. ௫

துன்பக் கடலிடைத் தோணித் தொழில்பூண்ட தொண்டர்தம்மை
இன்பக் கரைமுகந் தேற்றுந் திறத்தன மாறனயலே
பொன்பட் டொழுகப் பொருந்தொளி செய்யுமப் பொய்பொருந்தா
அன்பர்க் கணியன காண்கவை யாற னடித்தலமே. ௬

களித்துக் கலந்ததொர் காதற் கசிவொடு காவிரிவாய்க்
குளித்துத் தொழுதுமுன் னின்றவிப் பத்தரைக் கோதில்செந்தேன்
தெளித்துச் சுவையமு தூட்டி யமரர்கள் சூழிருப்ப
அளித்துப் பெருஞ்செல்வ மாக்குமை யாற னடித்தலமே. ௭

திருத்திக் கருத்தினைச் செவ்வே நிறுத்திச் செறுத்துடலை
வருத்திக் கடிமலர் வாளெடுத் தோச்சி மருங்குசென்று
விருத்திக் குழக்கவல் லோர்கட்கு விண்பட் டிகையிடுமால்
அருத்தித் தருந்தவ ரேத்துமை யாற னடித்தலமே. ௮

பாடும் பறண்டையு மாந்தையு மார்ப்பப் பரந்துபல்பேய்
கூடி முழவக் குவிகவிழ் கொட்டக் குறுநரிகள்
நீடுங் குழல்செய்ய வைய நெளிய நிணப்பிணக்காட்
டாடுந் திருவடி காண்கவை யாற னடித்தலமே. ௯

நின்போ லமரர்க ணீண்முடி சாய்த்து நிமிர்த்துருத்த
பொற்போ தழுக்கிப் பவளத் துடைப்பன பாய்கரியா
என்போ லிகள்பறித் திட்ட விலையு முகையுமெல்லாம்
அம்போ தெனக்கொள்ளு மையனை யாற னடித்தலமே. ௰

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மலையார் மடந்தை மனத்தன வானோர் மகுடமன்னி
நிலையா யிருப்பன நின்றோர் மதிப்பன நீணிலத்துப்
புலையாடு புன்மை தவிர்ப்பன பொன்னுல களிக்கும்
அலையார் புனற்பொன்னி சூழ்ந்தவை யாற னடித்தலமே. ௧

பொலம்புண் டரீகப் புதுமலர் போல்வன போற்றியென்பார்
புலம்பும் பொழுதும் புணர்துணை யாவன பொன்னனையாள்
சிலம்புஞ் செறிபா டகமுஞ் செழுங்கிண் கிணித்திரளும்
அலம்புந் திருவடி காண்கவை யாற னடித்தலமே. ௨

உற்றா ரிலாதார்க் குறுதுணை யாவன வோதிநன்றாற்
கற்றார் பரவப் பெருமை யுடையன காதல்செய்ய
கிற்பார் தமக்குக் கிளரொளி வானகந் தானகொடுக்கும்
அற்றார்க் கரும்பொருள் காண்கவை யாற னடித்தலமே. ௩

வானைக் கடந்தண்டத் தப்பான் மதிப்பன மந்திரிப்பார்
ஊனைக் கழித்துய்யக் கொண்டருள் செய்வன வுத்தமர்க்கு
ஞானச் சுடராய் நடுவே யுதிப்பன நங்கையஞ்ச
ஆனை யுரித்தன காண்கவை யாற னடித்தலமே. ௪

மாதிர மானில மாவன வானவர் மாமுகட்டின்
மீதன மென்கழல் வெங்கச்ச வீக்கின வெந்நமனார்
தூதரை யோடத் துரப்பன துன்பறத் தொண்டுபட்டார்க்
காதர மாவன காண்கவை யாற னடித்தலமே. ௫

பேணித் தொழுமவர் பொன்னுல காளப் பிறங்கருளால்
ஏணிப் படிநெறி யிட்டுக் கொடுத்திமை யோர்முடிமேல்
மாணிக்க மொத்து மரகதம் போன்று வயிரமன்னி
ஆணிக் கனகமு மொக்குமை யாற னடித்தலமே. ௬

ஓதிய ஞானமு ஞானப் பொருளு மொலிசிறந்த
வேதியர் வேதமும் வேள்வியு மாவன விண்ணுமண்ணுஞ்
சோதியுஞ் செஞ்சுடர் ஞாயிறு மொப்பன தூமதியோ
டாதியு மந்தமு மானவை யாற னடித்தலமே. ௭

சுணங்கு முகத்துத் துணைமுலைப் பாவை சுரும்பொடுவண்
டணங்குங் குழலி யணியார் வளைக்கரங் கூப்பிநின்று
வணங்கும் பொழுதும் வருடும் பொழுதும்வண் காந்தளொண்போ
தணங்கு மரவிந்த மொக்குமை யாற னடித்தலமே. ௮

சுழலார் துயர்வெயிற் சுட்டிடும் போதடித் தொண்டர்துன்னும்
நிழலா வனவென்று நீங்காப் பிறவி நிலைகெடுத்துக்
கழலா வினைகள் கழற்றுவ கால வனங்கடந்த
அழலா ரொளியன காண்கவை யாற னடித்தலமே. ௯

வலியான் றலைபத்தும் வாயவிட் டலற வரையடர்த்து
மெலியா வலியுடைக் கூற்றை யுதைத்துவிண் ணோர்கண்முன்னே
பலிசேர் படுகடைப் பார்த்துப்பன் னாளும் பலரிகழ
அலியா நிலைநிற்கு மையனை யாற னடித்தலமே. ௰

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அந்திவட் டத்திங்கட் கண்ணிய னையா றமர்ந்துவந்தென்
புந்திவட் டத்திடைப் புக்குநின் றானையும் பொய்யென்பனோ
சிந்திவட் டச்சடைக் கற்றை யலம்பச் சிறிதலர்ந்த
நந்திவட் டத்தொடு கொன்றை வளாவிய நம்பனையே. ௧

பாடகக் கால்கழற் கால்பரி திக்கதி ருக்கவந்தி
நாடகக் கானங்கை முன்செங்க ணானைத்தின் பின்னடந்த
காடகக் கால்கணங் கைதொழுங் காலெங்க ளாய்நின்றகால்
ஆடகக் காலரி மான்றேர் வலவனை யாறனவே.

திருச்சிற்றம்பலம். ௨

---

## திருக்குறுந்தொகை.

*திருச்சிற்றம்பலம்.*

சிந்தை வாய்தலு ளான்வந்து சீரியன்
பொந்து வார்புலால் வெண்டலைக் கையினன்
முந்தி வாயதோர் மூவிலை வேல்பிடித்
தந்தி வாயதோர் பாம்பரை யாறரே. க

பாக மாலை மகிழ்ந்தனர் பான்மதி
போக வானையி னீருரி போர்த்தவர்
கோக மாலை குலாயதோர் கொன்றையும்
ஆக வானையுஞ் சாடுமை யாறரே உ

நெஞ்ச மென்பதோர் நீள்கயந் தன்னுளே
வஞ்ச மென்பதோர் வான்சுழிப் பட்டுநான்
துஞ்சும் போழ்துநின் னாமத் திருவெழுத்
தஞ்சுந் தோன்ற வருளுமை யாறரே. ங

நினைக்கு நெஞ்சினுள் ளார்நெடு மாமதில்
அனைத்து மொள்ளழல் வாயெரி யூட்டினார்
பனைக்கை வேழத் துரியுடல் போர்த்தவர்
அனைத்து வாய்தலுள் ளாருமை யாறரே. ச

பரியர் நுண்ணியர் பார்த்தற் கரியவர்
அரிய பாடல ராடல ரன்றியும்
கரிய கண்டத்தர் காட்சி பிறர்க்கெலாம்
அரியர் தொண்டர்க் கெளியரை யாறரே. ரு

புலரும் போதி லலர்பட்ட பொற்சுடர்
மலரும் போதுக ளாற்பணி யச்சிலர்
இலரும் போதுமி லாதது மன்றியும்
அலரும் போது மணியுமை யாறரே. சு

பங்க மாலைக் குழலியொர் பாணிறக்
கங்கை மாலையர் காதன்மை செய்தவர்
மங்கை மாலை மதியமுங் கண்ணியும்
அங்க மாலையுஞ் சூடுமை யாறரே. எ

முன்னை யாறு முயன்றெழு வீரெலாம்
பின்னை யாறு பிரியெனும் பேதைகாள்
மன்னை யாறு மருவிய மாதவன்
தன்னை யாறு தொழுதல யாகுமே. அ

ஆனை யாறென வாடுகின் றான்முடி
வானை யாறு வளாயது காண்மினே
நானை யாறுபுக் கேற்கவ னின்னருள்
தேனை யாறு திறந்தாலை யொக்குமே. ௯

அரக்கின் மேனி யனந்தளிர் மேனிய
அரக்கின சேவடி யாளஞ்ச வஞ்சலென்
றரக்க னைந்து வைய மையாறனே
அருக்கி னுறையு யாறுமா யாறனே. ௰

திருச்சிற்றம்பலம்.

---

திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

சிந்தை வண்ணத்த ராய்த்திறம் பாவணம்
முந்தி வண்ணத்த ராய்முழு நீறணி
சந்தி வண்ணத்த ராய்த்தழல் போல்வதோர்
அந்தி வண்ணமு மாவரை யாறரே. ௧

மூல வண்ணத்த ராய்முத லாகிய
கோல வண்ணத்த ராகிக் கொழுஞ்சுடர்
நீல வண்ணத்த ராகி நெடும்பளிங்
கால வண்ணத்த ராவரை யாறரே. ௨

சிந்தை வண்ணமுந் தீயதோர் வண்ணமும்
அந்திப் போதழ காகிய வண்ணமும்
பந்திக் காலனைப் பாய்ந்ததோர் வண்ணமும்
அந்தி வண்ணமு மாவரை யாறரே. ௩

இருளின் வண்ணமு மேழிசை வண்ணமும்
சுருளின் வண்ணமுஞ் சோதியின் வண்ணமும்
பருகு நான்முகன் மாலொடு வண்ணமும்
அருளும் வண்ணமு மாவரை யாறரே. ௪

இழுக்கின் வண்ணங்க ளாகிய வெவ்வழல்
குழைக்கும் வண்ணங்க ளாகியுங் கூடியும்
மழைக்கண் மாமுகி லாகிய வண்ணமும்
அழைக்கும் வண்ணமு மாவரை யாறரே. ௫

இண்டை வண்ணமு மேழிசை வண்ணமும்
தொண்டர் வண்ணமுஞ் சோதியின் வண்ணமும்
கண்ட வண்ணங்க ளாய்க்கனன் மாமணி
அண்ட வண்ணமு மாவரை யாறரே. ௬

விரும்பும் வண்ணமும் வேதத்தின் வண்ணமும்
கரும்பி னின்மொழிக் காரிகை வண்ணமும்
விரும்பு வார்வினை தீர்த்திடும் வண்ணமும்
அரும்பின் வண்ணமு மாவரை யாறரே. ௭

ஊழி வண்ணமு மொண்சுடர் வண்ணமும்
வேழ வீருரி போர்த்ததொர் வண்ணமும்
வாழித் தீயுரு வாகிய வண்ணமும்
ஆழி வண்ணமு மாவரை யாறரே. ௮

செய்த வன்றிரு நீறணி வண்ணமும்
எய்த நோக்கரி தாகிய வண்ணமும்
கைது காட்சி யரியதோர் வண்ணமும்
ஐது வண்ணமு மாவரை யாறரே. ௯

எடுத்த வாளரக் கன்றிறல் வண்ணமும்
இடர்க்கண் போற்றெரி தாகிய வண்ணமும்
கடுத்த கைந்நரம் பாலிசை வண்ணமும்
அடுத்த வண்ணமு மாவரை யாறரே. ௰

திருச்சிற்றம்பலம்.

---

## திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

ஆரார் திரிபுரங்க ளீரு நோக்கு
மனலாடி யாரமுதே யென்றே னானே
கூரார் மழுவாட் படையொன் றேந்தி
குறட்பூதப் பல்படையா யென்றே னானே
பேரா யிரமுடையா யென்றே னானே
பிறைசூடும் பிஞ்ஞகனே யென்றே னானே
ஆரா வமுதேயென் னையா றன்னே
யென்றென்றே நானரற்றி நைகின்றேனே.

தீவாயின் முப்புரங்க ணீறா நோக்குந்
தீர்த்தா புராணனே யென்றேனானே
மூவா மதிசூடி யென்றேனானே
முதல்வாமுக் கண்ணானே யென்றேனானே
ஏவார் சிலையானே யென்றேனானே
பிடிர்க்கைப் படவின்று றேற வாங்கி
ஆவாவென் றருள்புரியு மையா றன்னே
யென்றென்றே நானரற்றி நைகின்றேனே. ௨

அம்மானன்னா வண்ணானே யென்றேனானே
யடியார்கட் காரமுதே யென்றேனானே
நஞ்சணி கண்டனே யென்றேனானே
நாவலர்க ணன்மறையே யென்றேனானே
நெஞ்சமனா வளைபுக் கிருந்த போது
நிறையு மமுதமே யென்றேனானே
அஞ்சாதே யாளவானே யையா றன்னே
யென்றென்றே நானரற்றி நைகின்றேனே. ௩

தொல்லைத் தொடுகடலே யென்றேனானே
துலங்கு மிளம்பிறையா யென்றேனானே
எல்லை நிறைந்தானே யென்றேனானே
யேழுநரம்பி னின்னிசையா யென்றேனானே
அல்லற் கடல்புக் கழுந்துவேனை
வாங்கி யருள்செய்தா யென்றேனானே
ஒல்லையா மையாறு வென்றேனானே
யென்றென்றே நானரற்றி நைகின்றேனே. ௪

இண்டைச் சடைமுடியா யென்றேனானே
யிருசுடர் வானத்தா யென்றேனானே
தொண்டர் தொழப்படுவா யென்றேனானே
துருத்திநெய்த் தானத்தா யென்றேனானே
கண்டங் கறுத்தானே யென்றேனானே
கனலாகுங் கண்ணானே யென்றேனானே
அண்டத்துக் கப்பாலா மையா றன்னே
யென்றென்றே நானரற்றி நைகின்றேனே. ௫

பற்றார் புரமெரித்தா யென்றேனானே
பசுபதீ பண்டரங்கா வென்றேனானே
கற்றார்க ளுவினா யென்றேனானே
கடுவிடையொன் றூர்தியா யென்றேனானே

பற்றுனார் நெஞ்சுளா யென்றேனானே
பார்த்தற் கருள்செய்தா யென்றேனானே
அற்றார்க் கருள்செய்யு மையா றன்னை
யென்றென்றே நானரற்றி நைகின்றேனே. ௬

விண்ணோர் தலைவனே யென்றேனானே
விளங்கு மிளம்பிறையா யென்றேனானே
மண்ணோ ரெரியெரிக்கா யென்றேனானே
மேயாப்ப மேயானே யென்றேனானே
பண்ணோர் பறைபாடி யென்றேனானே
பசுபதி பாவிற்று யென்றேனானே
அண்ணா வையாறனை யென்றேனானே
யென்றென்றே நானரற்றி நைகின்றேனே. ௭

அவனென்று நானுன்னை யஞ்சா தேனை
யல்ல லறுப்பானே யென்றேனானே
சிவனென்று நானுன்னை யெல்லாஞ் சொல்லச்
செல்வந் தருவானே யென்றேனானே
பவனாகி யென்னுள்ளத் துள்ளே நின்று
பண்டை வினையறுப்பா யென்றேனானே
அவனென்றே யாதியே யையா றனை
யென்றென்றே நானரற்றி நைகின்றேனே. ௮

சத்தியே கம்பனை யென்றேனானே
கயிலாயா காரோணா வென்றேனானே
நிச்சன் மருளானை யென்றேனானே
நினைப்பார் மனத்துளா யென்றேனானே
உச்சம்போ தேறேறி யென்றேனானே
யுள்குவா ருள்ளத்தா யென்றேனானே
அச்சம் பிணிதீர்க்கு மையா றன்னை
யென்றென்றே நானரற்றி நைகின்றேனே. ௯

வில்லாடி வேடனை யென்றேனானே
வெண்ணீறு மெய்க்கணிந்தா யென்றேனானே
சொல்லாய சூழலா யென்றேனானே
சுலாவாய தொன்னெறியே யென்றேனானே
எல்லாமா யென்னுயிரே யென்றேனானே
யிலங்கையர்கோன் றோளிறுத்தா யென்றேனானே
அல்லா வினைதீர்க்கு மையா றன்னை
யென்றென்றே நானரற்றி நைகின்றேனே. ௰

திருச்சிற்றம்பலம்.

## திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

ஓசை யொலியெலா மானாய் நீயே
    யுலகுக் கொருவனாய் நின்றாய் நீயே
வாச மலரெலா மானாய் நீயே
    மலையான் மருகனாய் நின்றாய் நீயே
பேசப் பெரிது மினியாய் நீயே
    பிரானா யடியென்மேல் வைத்தாய் நீயே
தேச விளக்கெலா மானாய் நீயே
    திருவையா றகலாத செம்பொற் சோதீ. க

நோக்கரிய திருமேனி யுடையாய் நீயே
    நோவாமே நோக்கருள வல்லாய் நீயே
காப்பரிய வைம்புலனுங் காத்தாய் நீயே
    காமனையுங் கண்ணழலாற் காய்ந்தாய் நீயே
ஆர்ப்பரிய மாநாக மார்த்தாய் நீயே
    யடியானென் றடியென்மேல் வைத்தாய் நீயே
தீர்ப்பரிய வல்வினைநோய் தீர்ப்பாய் நீயே
    திருவையா றகலாத செம்பொற் சோதீ. உ

கனத்தகத்துக் கடுஞ்சுடராய் நின்றாய் நீயே
    கடல்வரையோ டாகாய மானாய் நீயே
தனத்தகத்துத் தலைகலனாக் கொண்டாய் நீயே
    சார்ந்தாரைத் தகைந்தாள வல்லாய் நீயே
மனத்திருந்த கருத்தறிந்து முடிப்பாய் நீயே
    மலர்ச்சேவ டியென்மேல் வைத்தாய் நீயே
சினத்திருந்த திருநீல கண்ட னீயே
    திருவையா றகலாத செம்பொற் சோதீ. ங

வானுற்ற மாமலைக ளானாய் நீயே
    வடகயிலை மன்னி யிருந்தாய் நீயே
ஊனுற்ற வொளிமழுவாட் படையாய் நீயே
    யொளிமதியோ டரவுபுனல் வைத்தாய் நீயே
ஆனுற்ற வைந்து மமர்ந்தாய் நீயே
    யடியானென் றடியென்மேல் வைத்தாய் நீயே
தேனுற்ற சொன்மடவாள் பங்க னீயே
    திருவையா றகலாத செம்பொற் சோதீ. ச

பெண்ணாண் பிறப்பிலியாய் நின்றாய் நீயே
பெரியார்கட் கெல்லாம் பெரியாய் நீயே
உண்ணா வருநஞ்ச முண்டாய் நீயே
யூழி முதல்வனாய் நின்றாய் நீயே
கண்ணா யுலகெலாங் காத்தாய் நீயே
கழற்சே வடியென்மேல் வைத்தாய் நீயே
திண்ணார் மழுவாட் படையாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதி. ௫

உற்றிருந்த வுணர்வெலா மானாய் நீயே
யுற்றவர்க்கோர் சுற்றமாய் நின்றாய் நீயே
கற்றிருந்த கலைஞான மானாய் நீயே
கற்றவர்க்கோர் கற்பகமாய் நின்றாய் நீயே
பெற்றிருந்த தாயவளி னல்லாய் நீயே
பிரானா யடியென்மேல் வைத்தாய் நீயே
செற்றிருந்த திருநீல கண்ட னீயே
திருவையா றகலாத செம்பொற் சோதி. ௬

எல்லா வுலகமு மானாய் நீயே
யேகம்ப மேவி யிருந்தாய் நீயே
நல்லாரை நன்மை யறிவாய் நீயே
ஞானச் சுடர்விளக்காய் நின்றாய் நீயே
பொல்லா வினைக ளறுப்பாய் நீயே
புகழ்ச்சே வடியென்மேல் வைத்தாய் நீயே
செல்வாய செல்வந் தருவாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதி. ௭

ஆவினி லைந்து மமர்ந்தாய் நீயே
யளவில் பெருமை யுடையாய் நீயே
பூவினி னாற்றமாய் நின்றாய் நீயே
போர்க்கோலங் கொண்டெயி லெய்தாய் நீயே
நாவி னடுவுரையாய் நின்றாய் நீயே
நண்ணி யடியென்மேல் வைத்தாய் நீயே
தேவ ரறியாத தேவ னீயே
திருவையா றகலாத செம்பொற் சோதி. ௮

எண்டிசைக்கு மொண்சுடராய் நின்றாய் நீயே
யேகம்ப மேய விறைவ னீயே
வண்டிசைக்கு நறுங்கொன்றைத் தாராய் நீயே
வாரா வுலகருள வல்லாய் நீயே

தொண்டிசைத்துன் னடிபரவ நின்றாய் நீயே
தூமலர்ச்சே வடியென்மேல் வைத்தாய் நீயே
திண்சிலைக்கோர் சரங்கூட்ட வல்லாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ. கூ

விண்டார் புரமூன்று மெய்தாய் நீயே
விண்ணவர்க்கு மேலாகி நின்றாய் நீயே
கண்டாரைக் கொல்லுநஞ் சுண்டாய் நீயே
காலங்க ளூழியாய் நின்றாய் நீயே
தொண்டா யடியேனை யாண்டாய் நீயே
தூமலர்ச்சே வடியென்மேல் வைத்தாய் நீயே
திண்டோள்விட் டெரியாட லுகந்தாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ. ய

ஆரு மறியா விடத்தாய் நீயே
யாகாயந் தேரூர வல்லாய் நீயே
பேரும் பெரிய விலங்கை வேந்தன்
பெரிய முடிபத் திறுத்தாய் நீயே
ஊரும் புரமூன்று மட்டாய் நீயே
யொண்டா மரையானு மாலுங் கூடித்
தேரு மடியென்மேல் வைததாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ. கக

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

பண் — கார்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

பரவும்பரிசொன் றறியேனான் பண்டேயும்மைப் பயிலாதேன்
இரவும்பகலு நினைந்தாலு மெய்தநினைய மாட்டேனான்
கரவிலருவி கமுகுண்ணத் தெங்கங்குலைக்கீழ்க் கருப்பாலை
அரவந்திரைக்கா விரிக்கோட்டத் தையாறுடைய வடிகளோ. க

எங்கேபோவே னாயிடினு மங்கேவந்தென் மனத்தீராய்ச்
சங்கையொன்று மின்றியே தலைநாள்கடைநா ளொக்கவே
கங்கைசடைமேற் கரந்தானே கலைமான்மறியுங் கனன்மழுவும்
தங்குந்திரைக்கா விரிக்கோட்டத் தையாறுடைய வடிகளோ. உ

மருவிப்பிரிய மாட்டேனுன் வழிநின்றொழிந்தே னொழிகிலேன்
பருவிவிச்சி மலைச்சாரற் பட்டைகொண்டு பகடாடிக்
குருவியோப்பிக் கிளிகடிவார் குழன்மேன் மாலை கொண்டோட்டம்
தரவந்திரைக்கா விரிக்கோட்டத் தையாறுடைய வடிகளோ. ௩

பழகாநின்று பணிசெய்வார் பெற்றபயனொன் றறிகிலேன்
இகழாதுமக்காட் பட்டோர்க்கு வேசாடமொன் றரைச்சார்த்தி
குழகாவாழைக் குலைத்தெங்கு கொணர்ந்துகரைமே லெறியவே
அழகார்திரைக்கா விரிக்கோட்டத் தையாறுடைய வடிகளோ. ௪

பிழைத்தபிழையொன் றறியேனுன் பிழையைத்தீரப் பணியாயே
மழைக்கணல்லார் குடைந்தாட மலையுநிலனுங் கொள்ளாமைக்
கழைக்கொள்பிரசங் கலந்தெங்குங் கழனிமண்டிக் கையேறி
அழைக்குந்திரைக்கா விரிக்கோட்டத் தையாறுடைய வடிகளோ. ௫

காக்கொள்கொன்றை சடைமேலொன் றுடையாய் விடையாய்கையினுன்
மூர்க்கர்புரமூன் றெரிசெய்தாய் முன்னீ பின்னீ முதல்வனீ
வார்க்கொளருவிபலவாரி மணியுமுத்தும் பொன்னுங்கொண்
டார்க்குந்திரைக்கா விரிக்கோட்டத் தையாறுடைய வடிகளோ. ௬

மலைக்கண்மடவா ளொருபாலாய்ப் பற்றியுலகம் பலிதேர்வாய்
சிலைக்கொள்கணையா லெயிலெய்த செங்கண்விடையாய் தீர்த்தனீ
மலைக்கொளருவி பலவாரி மணியுமுத்தும் பொன்னுங்கொண்
டலைக்குந்திரைக்கா விரிக்கோட்டத் தையாறுடைய வடிகளோ. ௭

போழுமதியும் புனக்கொன்றை புனல்சேர்சென்னிப் புண்ணியா
சூழுமரவச் சுடர்ச்சோதி யுன்னைத்தொழுவார் துயர்போக
வாழுமவர்க ளங்கங்கே வைத்தசிந்தை யுய்த்தாட்ட
ஆழுந்திரைக்கா விரிக்கோட்டத் தையாறுடைய வடிகளோ. ௮

கதிர்க்கொள்பசியே யொத்தேநான் கண்டேனும்மைக் காணுதேன்
எதிர்த்துநீந்த மாட்டேனு னெம்மான்றம்மான் றம்மானே
விதிர்த்துமேக மழைபொழிய வெள்ளம்பரந்து நுரைசிதறி
அதிர்க்குந்திரைக்கா விரிக்கோட்டத் தையாறுடைய வடிகளோ. ௯

கூசியடியா ரிருந்தாலுங் குணமொன்றில்லீர் குறிப்பிலீர்
தேசவேந்தன் றிருமாலு மலர்மேலயனுங் காண்கிலாத்
தேசமெங்குந் தெளித்தாடத் தெண்ணீரருவி கொணர்ந்தெங்கும்
வாசந்திரைக்கா விரிக்கோட்டத் தையாறுடைய வடிகளோ. ௰

கூடியடியா ரிருந்தாலுங் குணமொன்றில்லீர் குறிப்பிலீர்
ஊடியிருந்து முணர்கிலே னும்மைத்தொண்ட னூரனேன்
தேடியெங்குங் காண்கிலேன் றிருவாரூரே சிந்திப்பன்
ஆடுந்திரைக்கா விரிக்கோட்டத் தையாறுடைய வடிகளோ. கக

திருச்சிற்றம்பலம்.

---

## ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்த

### திருவாசகம்—திருவம்மானை.

திருச்சிற்றம்பலம்.

கையார் வளைசிலம்பக் காதார் குழையாட
மையார் குழல்புரளத் தேன்பாய வண்டொலிப்பச்
செய்யானை வெண்ணீ றணிந்தானைச் சேர்ந்தறியாக்
கையானை யெங்குஞ் செறிந்தானை யன்பர்க்கு
மெய்யானை யல்லாதார்க் கல்லாத வேதியனை
ஐயா றமர்ந்தானைப் பாடுதுங்கா ணம்மானாய்.

---

## திருவெண்காட்டடிகள் திருவாக்கு.

### நேரிசைவெண்பா.

மண்ணுந் தணலாற வானும் புகையாற
எண்ணரிய தாயு மிளைப்பாறப்—பண்ணுமயன்
கையாற வும்மடியேன் காலாற வுங்கண்பார்
ஐயா! திருவையா று!

---

## ஐயடிகள் காடவர்கோன் நாயனார் அருளியது.

### திருவெண்பா.

குந்தி நடந்து குனிந்தொருகை கோலூன்றி
நொந்திருமி யேங்கி நுரைத்தேறி—வந்துந்தி
ஐயாறு வாயாறு பாயாமு னெஞ்சமே!
ஐயாறு வாயா லழை.

திருச்சிற்றம்பலம்.

---

## அருணகிரிநாதர் அருளிச்செய்த திருப்புகழ்.

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன — தனதான.

சொரியு மாமுகி லோஇரு ளோகுழல்
சுடர்கொள் வாளிணை யோபிணை யோவிழி
சுரர்த மாரமு தோகுயி லோமொழி — இதழ்சோவை

துவர தோஇல வோதெரி யாவிடை
துகளி லாவண மோபிடி யோநடை
துணைகொள் மாமலை யோமுலை தாமெ — உரையாடிப்

பரிவி னாலிணை யாளுக நாளொரு
பழுதி லானென வாணுத லாரொடு
பகடி யேபடி யாவொழி யாவிடர் — படுமாயப்

பரவை மீதழி யாவகை ஞானிகள்
பரவு நீள்புக ழேயது வாமிகு
பரம வீடது சேர்வது மாவதும் — ஒருநாளே

கரிய மேனிய னானிரை யாள்பவன்
அரிய ராவணை மேல்வளர் மாமுகில்
கனகன் மார்பது பீறிய வாளரி — கனமாயக

கபடன் மாமுடி யாறுட னாலுபோர்
கணையி னால்நில மீதுற நூறிய
கருணை மால்கவி கோபக்ரு பாகரன் — மருகோனே

திரிபு ராதிகள் தூளெழ வானவர்
திகழ வேமுனி யாவருள் கூர்பவர்
தெரிவை பாதியர் சாதியி லாதவர் — தருசேயே

சிகர பூதரம் நீறுசெய் வேலவ
திமிர மோகர வீரதி வாகர
திருவை யாறுறை தேவக்ரு பாகர — பெருமாளே.

